# மன்றம்

ஆசிரியர்:
இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

1 – 11 – 56

★

அணா 4

★






# "குரங்கு நிலையிலேயே இருக்கிறாய்!"

அறிஞர் அண்ணா அவர்கள் தம்நண்பர்களோடு ஒருநாள் நண்பகலில் உணவு அருந்திக்கொண்டிருந்தபோது, உணவு அருந்திக் கொண்டிருந்தவர்களிடையே மரக்கறியுணவு, மாமிசவுணவு பற்றிய விளக்கங்கள் பரிமாறிக்கொள்ளப்பட்டன.

மரக்கறியுணவு-மாமிசவுணவு பற்றிய விவாதம் எழுவதற்குக் காரணம், 'திராவிடநாடு' அலுவலகத்தில் ஓவியராக இருந்துவரும் தோழர் பழனி அவர்கள், தமக்கு மாமிசவுணவு பிடிக்காது என்றும் மரக்கறியுணவே வேண்டும் என்றும் சொல்லி, அதனை வாங்கிக்கொண்டு தனியே உட்கார்ந்து சாப்பிட்டார்; மற்ற நண்பர்களெல்லாம் மாமிசவுணவைச் சாப்பிட்டார்கள். மாமிச வுணவைச் சாப்பிட்டவர்களெல்லாம் தோழர் பழனி அவர்களை வற்புறுத்திச் சிறிதளவு மாமிசத்தைச் சாப்பிட்டுப் பார்க்கும்படி கூறினர்கள்; தோழர் பழனி அவர்கள் தனக்குப் பழக்கமில்லை என்று சொல்லி இறுதிவரையில் மறுத்தே வந்தார்; அதன் பேரில் மரக்கறியுணவு-மாமிசவுணவு பற்றிய விளக்கங்கள் கூறப்பட்டன. நண்பர்கள் பலரும் தத்தம் விளக்கங்களைத் தந்தனர்.

மரக்கறியுணவு சாப்பிடும் விலங்குகள் எப்படியிருக்கின்றன, மாமிசம் சாப்பிடும் விலங்குகள் எப்படியிருக்கின்றன, முதல்வகையைச் சார்ந்த விலங்குகள் எப்படி மக்களால் பழக்கப்படுத்தி உதவிக்கு வைத்துக்கொள்ளக்கூடியனவாக இருக்கின்றன. இரண்டாம் வகையைச் சார்ந்தவைகள் எப்படிப் பெரும்பாலும் கொடூரம் வாய்ந்தனவாகவும், காட்டில் வாழ்வனவாகவும் இருக்கின்றன என்பனபோன்ற விளக்கங்கள் பரிமாறிக் கொள்ளப்பட்டன.

மனிதனுடைய உறுப்பு அமைப்புகள், குடல் அமைப்பு எல்லாம் அவன் மரக்கறியுணவுசாப்பிடும் வகையைச் சேர்ந்தவன் என்பதைத்தான் காட்டுகின்றன; மேலும் குரங்கிலிருந்துதான் மனிதன் வந்தான் என்று சொல்லப்படுவதாலும், குரங்கு மரக்கறியுணவு சாப்பிடும்வகையைச் சேர்ந்ததாக இருப்பதாலும், மனிதன் இயற்கை நியதிப்படி முதல் வகையைச் சேர்ந்தவனாகத்தான் கருதப்படவேண்டும் என்று ஒரு நண்பர் கூறினர்.

உடனே தோழர் பழனி அவர்கள் தமதுகட்சிக்கு, வலிவு ஏற்பட்டுள்ளதாகக் கருதிக்கொண்டு "அப்படிச்சொல்லுங்கள்! அப்படிச்சொல்லுங்கள்!" என்று கூறி மகிழ்ச்சி கொண்டாடினர்.

மனிதன் நாளுக்குநாள் அறிவு ஆற்றல் பெற்று வளர்ந்த பிறகுதான் மாமிசத்தைப் பக்குவப்படுத்தித் தின்னக் கற்றுக்கொண்டிருக்கிறான்; இது செயற்கை முறையில் அவனுக்குப்படிந்த பண்பு என்று முதலில்கூறிய நண்பர் மேலும் விளக்கம் தந்தார்.

அதுகேட்ட தோழர் பழனி "நான் இயற்கைப்பண்பினைக் கடைப்பிடிப்பவன். எனவேதான் நான் மரக்கறி சாப்பிடுகிறேன். நீங்களெல்லாம் செயற்கைப் பண்பினைக் கடைப்பிடிப்பவர்கள். எனவேதான் மாமிசம் சாப்பிடுகிறீர்கள்!" என்று ஏளனக்குரலில் குறுப்பிட்டார்.

அது கேட்டுக்கொண்டிருந்த அறிஞர் அண்ணாஅவர்கள், "அப்படியானல் நீ மாமிசம் தின்னக் கற்றுக்கொள்ளாத குரங்கு நிலையிலேயே இருக்கிறாய்; நாங்கள் மாமிசம் தின்னக் கற்றுக்கொண்ட அறிவாற்றல் மிகுந்த நாகரிக நிலையில் இருக்கிறோம் என்று பொருள் கொள்ளவேண்டும்" என்று கூறவே எல்லோரும் கொல்லென்று சிரித்துத் தோழர் பழனி அவர்களைக் கேலி செய்தார்கள். தோழர் பழனி பரிதாபத்திற் குரியவரானர்!

பிறகு தோழர் பழனி அவர்கள் எல்லோரோடும் சேர்ந்து, அறிஞர் அண்ணா அவர்களின் நயம் நிறைந்த உரையை நினைந்து நினைந்து சிரித்து மகிழ்ந்தார்!


# மன்றம்

இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

மலர் 5 ★ (1—11—56) ★ இதழ் 13


## 150 போர்முனைகள்

காரிருள் அகத்தில் நல்ல கதிரொளி! இருண்ட வானில்ஒளி வீச்சு! தேய்ந்த திராவிடத்தில், தீய்ந்துபோன மக்கள் வாழ்க்கையில்புதிய நம்பிக்கை! தென்னாட்டு அரசியலில் புதிய பாதை!

திராவிட முன்னேற்றக்கழகம் தேர்தலில் போட்டியிடுகிறது.

திருச்சி மாநில மாநாட்டில் எடுத்த முடிவு—நிறைவேற்றப்பட்ட பல தீர்மானங்களுக்கெல்லாம் கடைசியாக இருக்கும் சிறு தீர்மானம், ஆனல் அரசியலுலகில் பெருத்த அலை மோதலை உண்டாக்கிய தீர்மானம்!

"ஒரு அரசியல் கட்சியின் ஜனநாயகக் கடமைகளில் ஒன்று தேர்தலில் நிற்பது" அறிஞர் அண்ணா மிகத் தெளிவாகக் குறிப்பிட்டார். திராவிட முன்னேற்றக் கழகம் அந்தக் கடமையை உணர்ந்து தேர்தலில் ஈடுபடுவதென முடிவு செய்தது.

கழகம் தேர்தலில் ஈடுபடத் தீர்மானித்தது குறித்து, மாற்றுக் கட்சியினரும் ஆளுங்கட்சியினரும் வரவேற்றனர். கனம் காமராஜர் முதலில் கனிவுடன் அதை வரவேற்றுப் பேசினர். நாடு இருக்கும் நிலையில், கழகம் அடைந்துள்ள வளர்ச்சியில், தீர்மானத்துடன் நின்று விடாது, தேர்தலில்தி.மு.க. ஈடுபடுவது நிச்சயம், பலமான எதிர்ப்பைத் தருவதும் உறுதி என்ற எண்ணம் ஏற்பட்டதும், கனிவுமாறி, அலட்சியம்போய், காமராஜர் குரல் கரகரப்படைந்தது, காரசாரமாகப்பேசத்தொடங்கினர். புயல்வேகத்தில் ஊர்களைச் சுற்றிவரப் புறப்பட்டார். புயல் போலவே இப்பொழுது சற்று ஓய்ந்துள்ளார்!

கடந்த தேர்தலில் திராவிட முன்னேற்றக் கழகம் நேரடியாக ஈடுபடாமல் இருப்பது கண்டு, ஏன் இவர்கள் நிற்கக்கூடாது என்று கேட்டவர்கள் உண்டு. பிரச்சாரவலிவும், மக்கள் ஆதரவும் இருந்தும் அவற்றைப் பயன்படுத்தாமல் இருக்கிறார்களே எனப் பரிதாபப்பட்டவர்கள் உண்டு. ஏன் நிற்கக்கூடாது என்று கேட்டவர்கள், கழகம் தேர்தலில் நிற்கிறது என்று தீர்மானித்ததும், ஏன் நிற்கிறார்கள் என்று புதிய தொல்லைக்கு ஆளானவர்களைப் போல பேசுகின்றனர்! கழகத்தைப் பார்த்து கடந்த தேர்தலில் பரிதாபப்பட்டவர்கள் இப்பொழுது பயப்படுகிறார்கள் இவர்கள் ஏன் நின்று விட்டார்கள் என்று!

தேர்தலில்நிற்பது குறித்த நமது தீர்மானம் மாற்றுக் கட்சியினரிடம் வெவ்வேறான மாறுபாடுகளையும் மனமாச்சரியங்களையும் உண்டாக்கியபோதிலும், மக்களிடம் மகிழ்ச்சியையும் நம்பிக்கையையும் மலரச்செய்துள்ளது! கழகத் தோழர்களின் ஆர்வமும் வலிவும் பலமடங்கு வளர்ந்துள்ளன! மாநில மாநாட்டின்போதும், அதற்குப்பின் நடந்த நூற்றுக்கணக்கான கூட்டங்களிலும், தேர்தல் குறித்து பேசப்படும்பொழுது மக்கள் காட்டும் நல்லாதரவு நம்பிக்கை ஊட்டுவதாக இருந்தது!

திராவிட முன்னேற்றக்கழகம் தேர்தலில் போட்டியிடுகிறது! இது மக்களுக்கு, கழகத் தோழர்களுக்குத் தித்திக்கும் செய்தியாக வந்தது! பலர் பாராட்டினர், சிலர் திகைத்தனர்! திகைப்பாளர்களுக்கு ஏற்பட்டுள்ள திகிலை அதிகப்படுத்தும் விதத்தில் மற்றொரு செய்தியும் வருகிறது!

வரும் தேர்தலில் திராவிடமுன்னேற்றக் கழகம் 150 இடங்களில் போட்டியிடும்!

தேர்தல் வாய்ப்புகளை ஆராயச்சென்ற ஆய்வுக்குழுவினர், நேரில் சென்று ஆங்காங்குள்ள நிலைமைகளைக் கண்டறிந்து, நூற்றைம்பது இடங்களில் கழகம் போட்டியிடலாம் எனத் தெரிவித்துள்ளனர்! தென்னாட்டு அரசியலில் மட்டுமல்ல, இந்திய அரசியலிலேயே, அதிசயிக்கத்தக்க சம்பவம் காங்கிரசுக்கு எதிராக, ஆளுங்கட்சிக்கு எதிராக ஒரு மாநிலத்தில், பலத்த எதிர்ப்பு வருவது! அதிலும் கழகம் உருவாகி எட்டாண்டு காலமே ஆகிறது, முதல் தடவையாகத் தேர்தலில் நிற்கிறது! இருந்த போதிலும் கழகம் தேர்தலில் காங்கிரசை எதிர்த்து 150 இடங்களில் போட்டியிடுவதென முடிவு செய்துள்ளது.

நல்லதொரு எதிர்க்கட்சி தேவை என்பது வலியுறுத்தப்படுகிறது. ஜனநாயக அமைப்

பில் ஒரேகட்சிமட்டும் ஏகபோக மிராசாக விளங்கி வருவது நாட்டுக்கு மட்டுமல்ல, ஆளுங் கட்சிக்குக்கூட ஆகாததொன்று எனப் பலரும் பேசி வருகின்றனர்.

காங்கிரசுக்கு எதிர்க்கட்சி தேவையென்பதைக் காங்கிரசில் உள்ளவர்களே குறிப்பிடத் தலைப்பட்டுள்ளனர். காங்கிரசுக்கு எதிராக ஒருகட்சி வரவேண்டும் என்று இராஜகோபாலாச்சாரியார் சொல்ல ஆரம்பித்தார், அவர் சொல்வதற்கு உள்ளெண்ணம் வேறு பல இருந்தாலும், அவர் எதிர்க்கட்சிக்கான தேவையை விளக்கமாகக் கூறியுள்ளார். மதுரையில் அவர் பேசியபொழுது, "முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் காங்கிரசுக்காரர் என்றால் அகிம்சைவாதி, நேர்மையானவர், சத்தியத்துக்குக் கட்டுப்பட்டவர் என்ற எண்ணம் பொதுவாக கொண்டிருந்தார்கள். இன்றுஇவ்வளவு பண்புகளும் இழந்த, மாறுபட்ட சுபாவம் கொண்டவரே காங்கிரசுக்காரர் என்ற எண்ணம் பொதுமக்களிடை நிலவுகிறது... இந்த நிலையை மாற்றிக் காங்கிரசு தன் பழைய செல்வாக்கையும், உரிய நிலையையும் அடையக் காங்கிரசுக்கு நல்ல எதிர்க்கட்சி அமையவேண்டும்." எனக் கூறியிருக்கிறார். ஆச்சாரியார் உள்ளுக்குள் காங்கிரசு கெட்டுவிட்டது, அதைத் திருத்துவது எப்படி என்று கேட்டுக் கொள்கிறார். அகிம்சை, நேர்மை, சத்தியம் இந்தப்பண்புகளை இழந்தவர்களே காங்கிரசுக்குள் நிறைந்து விட்டனர். இந்தநிலை மாற நல்ல எதிர்கட்சி தேவை என்கிறார். ஆச்சாரியார் அகராதிப்படி "நல்ல எதிர்க்கட்சி" என்பதற்கு அர்த்தம் பல இருக்கும்.

அரசியல் பிளவுகளில் சிக்கி ஆச்சாரியார் கூறுகிறார் என்று ஒதுக்கிவிடலாம். ஆனால் அரசியலில் சிக்காத பெரியவர் ஒருவர் - வினோபா அவர்கள் காங்கிரசின் அலங்கோலத்தை விளக்குகிறார். "பெரும்பான்மைக்கட்சி சிறந்த பலன்களை உண்டாக்கவில்லை. இன்று அதிகாரம் ஒருசில தலைவர்களின் கையில் குவிந்திருப்பது அபாயகரமானது." பெரும்பான்மைக் கட்சியென்று காங்கிரசை அவர் குறிப்பிட்டார். அதிகாரம் சில தலைவர்களின் கையில் குவிந்திருப்பதால் எதேச்சாதிகாரப் போக்கில் ஆட்சிமுறை சென்றுவிட்டது. இது நாட்டுக்கு அபாயமென வினோபா கூறுகிறார்.

எதிர்க்கட்சி அவசியம்பற்றி, அரசியலுக்கு முற்றிலும் அப்பாற்பட்ட பல்கலைக் கழகத் துணைவேந்தர் ஒருவரும் அண்மையில் குறிப்பிட்டுள்ளார். அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில், துணைவேந்தர் நாராயனசாமிப்பிள்ளை அவர்கள் "ஒரேகட்சி அரசியலை நடத்துவதென்பது இயலும். ஆனால் எதிர்கட்சி இல்லாமலே போமேயானால் ஒருகட்சியே நடத்தும் ஆட்சி குறிப்பிட்ட சிலரால் நடத்தப்படும் ஏகாதிபத்தியமாகக் குன்றிவிடும். அரசியலமைப்பின்படி நேரிய முறையில் உயர்ந்த கொள்கைகளைக் கொண்ட ஒரு எதிர்க்கட்சி நம் அரசாங்கத்திற்கு இன்றியமையாத தொன்று. ஆனால் அப்படிப்பட்ட எதிர்க்கட்சி இல்லாதிருப்பது வருந்தத்தக்கது" என்று கூறியுள்ளார்.

எதிர்க்கட்சி தேவையைப்பற்றி அனைவரும் பேசிவிட்டார்கள் என்றாலும், எந்தக்கட்சி எதிர்க்கட்சியாகலாம் என்பதைப்பற்றி அவர்கள் கூறவில்லை, கூறமுடியவில்லை பல்வேறு காரணங்களால்.

சென்னை மாநிலத்தைப்பற்றிய வரையில், எதிர்க்கட்சி அமைக்க-அதிலும் நல்ல எதிர்க்கட்சி அமைக்க வலிவும் தெளிவும் உள்ளது திராவிட முன்னேற்றக் கழகம் என்பதைத் தமிழ்ப்பண்பாளர் பி. டி. இராசன் அவர்கள் வேலூர் முனிசிபல் வரவேற்பில் பேசிடும் பொழுது தெளிவாகக் கூறியிருக்கிறார்.

நல்லாட்சி தேவை, நல்லாட்சிக்கு நல்ல எதிர்க்கட்சி வேண்டுமென்றால், தேர்தலில் ஆளுங்கட்சிக்கு எதிராகப் போட்டியிட வேண்டும். போட்டியென்றால், வெறும் தேர்தல் போட்டிமட்டு மல்ல; குறிப்பிட்ட கொள்கை வரையறைகளின் மீது போட்டியிடவேண்டும். மக்களாதரவைப் பெற்று இயங்கிவரும் எதிர்ப்பக்கம், ஆட்சியில் அவ்வப்பொழுது காணப்படும் குறைபாடுகளைச் சுட்டிக்காட்டித் திருத்த முயலுவதுடன், ஆட்சியாளர் விட்டு விடுகிற நல்ல காரியங்களைச் செய்து முடிக்க அரசாங்கத்தைத் தூண்டுவதற்கும் பயன்படும். அரசியல் அறிவும் தெளிவும் பெற்றோர், ஆளுங்கட்சியைச் சரியாகக் கண்காணிக்க எதிர்க்கட்சி வேண்டும் என்பதை ஒப்புக்கொள்வார்கள்.

காங்கிரசுக்கட்சி மிகப்பெரும் ஒரே கட்சியாக மட்டும் விளங்கவில்லை. ஏதேச்சாதிகாரக் கட்சியாய் விளங்குகிறது, ஏகாதிபத்திய வெறி கொண்டவர்கள் கும்மாளமடிக்கும் கூடாரமாகவும் ஆகிவிட்டது. மொழிவழி மாநிலத்தில், காங்கிரசுக்கட்சி காட்டும் எதேச்சாதிகாரம் சொல்லுந்தரமன்று. மராட்டியம் மறுத்த போதிலும், குஜராத் எதிர்த்தபோதிலும், பம்பாய் ஒப்புக்கொள்ளாது கலகம் விளைவிக்கிறது என்ற போதிலும், பெரும்பான்மையான உறுப்பினர்கள் தமது பக்கத்தில் இருக்கின்றனர் என்ற காரணத்தினால் காங்கிரசும் நேருபண்டிதரும் தமது முடிவைக் கட்டாயப் படுத்திச் சட்டமாக்கி விட்டனர். மொழிவெறி கொண்டோர் காங்கிரசுக்குள் தமது கனவின் படி ஆட்சி முறைகளை அமைக்கவும், இந்தி அல்லாத மற்ற மொழிகளை அலட்சியப் படுத்தவும் துணிந்து காரியங்கள் செய்கின்றனர்.

ஜனநாயகமுறையில் காங்கிரசு செயலாற்றாத காரணத்தினால், ஜனநாயக ஆட்சியால் நாட்டுக்குக் கிடைக்கவேண்டிய நன்மைகள் கிடைக்கவில்லை. ஜனநாயக முறையில் ஆட்சி நடத்தாது மட்டுமல்லாமல், ஜனநாயக முறையில் எதிர்க்கட்சிகள் உருவாவதை காங்கிரசு அனுமதிக்கவில்லை. எதிர்க்கட்சிகளை அடக்குமுறை கொண்டு அடக்கி ஒடுக்கி வைக்கவே பாடுபட்டது.

ஆளுங்கட்சியினர் மக்களை மதிக்காமல், மக்கள் உரிமைகளை ஒதுக்கித் தள்ளி, நாட்டுக்கு. கேடுகள் விளைக்கும் விதத்தில் செயல் பல செய்து இறுமாந்து கிடந்த போதிலும், தேர்தல் காலத்தில் மட்டும் மக்களிடம் ஓட்டு வாங்க வரவேண்டியிருக்கிறது. இந்தத் தேர்தல் சமயத்தில்தான் ஆளுங் கட்சியினரைக் கேள்விகேட்கக் கூடிய வாய்ப்பு கிடைக்கிறது. ஆளுங்கட்சியினர் செய்துள்ள அலங்கோலங்களையும், அவர்கள் வைத்துள்ள தீயதிட்டங்களையும் மக்களுக்கு உணர்த்தும் வாய்ப்பு மாற்றுக்கட்சியினருக்குக் கிடைக்கிறது. ஜனநாயக முறையில் நல்லாட்சி மலர, நல்லாட்சி நடை பெறத் தேர்தல் அவசியப்படுகிறது; தேர்தலில் ஆளுங்கட்சியினரும் மாற்றுக் கட்சியினரும் தனது திட்டங்களையும் கொள்கைகளையும் மக்கள் முன்வைத்துப் பேசவேண்டியிருக்கிறது. பொதுவாகத் தேர்தல் காலத்தில் அரசியல் விழிப்புணர்வு மக்களுக்கு உண்டாகிறது. அரசியல் கட்சிகள் அனைத்தும் மக்களிடைத் தமது அரசியல் கொள்கைகளைப் பேச முன் வருகின்றன. ஜனநாயகமுறையில் தேர்தலில் கலந்துகொள்வது அரசியல் கட்சிகளின் முக்கிய பண்பாகிறது, கடமையாகிறது. அந்தக் கடமையை நன்குணர்ந்த காரணத்தால், தேர்தலில் கலந்துகொள்ள திராவிட முன்னேற்றக் கழகம் தீர்மானித்தது.

திராவிட முன்னேற்றக் கழகம் துவங்கி எட்டாண்டுகாலமே ஆகிறது, அதிலும் முதல் தடவையாகத் தேர்தலில் கலந்துகொள்கிறது. காங்கிரசை எதிர்த்து நிற்கிறது. தேர்தலில் காங்கிரசுக்குள்ளபலத்தை நாம் உணராதில்லை. பணபலம் பயங்கரமான அளவுக்குக் காங்கிரசிடம் குவிந்திருக்கிறது. ஆலை அரசர்கள் "அன்பளிப்புகள்" காங்கிரசின் பணப்பெட்டியை நிரப்புகிறது. கொள்ளை இலாபக்காரர்கள், கள்ளமார்க்கட் கழுகுகள் இவர்கள் அளித்த "காணிக்கைகள்" காங்கிரசிடமிருக்கிறது. மிட்டாமிராசுகள், மாஜிஜமின்தார்கள், ராஜாக்கள், கோடிசுவரர்கள், கொயாங்காக்கள், டால்மியாக்கள், டாடாக்கள் அவர்களின் பண மூட்டைகளெல்லாம், தேர்தல் வெள்ளத்தில் காங்கிரசு மாளிகையைக் காப்பாற்ற முட்டுக் கொடுத்துவைக்கப்பட்டுள்ளன. பண பலத்துடன், பத்திரிகை பலம் காங்கிரசு கட்சியிடம் இருக்கிறது. ஆளுங்கட்சியினராகயிருப்பதால், செய்திப்படங்கள், வானொலிபோன்ற பொது அமைப்புகள்கூட, தேர்தலில் காங்கிரசுக்கு ஆதரவாகப் பயன்படுத்தப் படுகின்றன.

பணத்தைக் கொண்டே எதிர்க்கட்சியினரை அடித்து வீழ்த்துவதென்ற நம்பிக்கையில், காங்கிரசு ஏராளமாகப் பணபலத்தைத் திரட்டி வைத்திருப்பதுடன், இலட்சக்கணக்கில் செலவிடக்கூட 'பெரும்புள்ளிகளை" வலை போட்டுப் பிடித்து பிரதிநிதிகளாக நிறுத்தும் முயற்சியில் காங்கிரசு ஈடுபட்டிருக்கிறது.

காங்கிரசின் பலத்தையும், அதன் சார்பில் நிற்கும் கனதனவான்களின் பணத்தையும் பார்க்கும்பொழுது, எதிர்த்து நின்று போராட முடியுமா என்ற எண்ணம் எவருக்கும் எழாது. காங்கிரசின் பணபலமும் வசதிகளும் மற்றக் கட்சியினருக்குக் கிடையாது. காங்கிரசின் பலத்தை உணர்ந்துதான் திராவிட முன்னேற்றக் கழகம் போட்டியிடுகிறது.

காங்கிரசு ஆலை அரசர்களை நம்பியிருக்கிறது, ராஜாக்கள் ஜமின்தாரர்களை நம்பியிருக்கிறது, பனியாக்களை, பர்மிட்முதலாளிகளை நம்பியிருக்கிறது.

கழகம் பொதுமக்களை நம்பியிருக்கிறது.

பெரும் பத்திரிக்கைகள் நம்மிடமில்லை, தனி விமானத்தில் பறந்து நாடெங்கும் பிரசாரம் செய்திடும் வசதிகள் இல்லை. எப்படியேனும் வெற்றிபெற வேண்டுமென்ற வெறியில் பணத்தை வாரி யிறைக்கும் சக்தி இல்லை.

எட்டாண்டு நிரம்பாத இளம் வயதினன் படமெடுத்தாடிவரும் நாகத்தை அடிக்கத் தடி தூக்கிவருவதுபோன்று, காங்கிரசின் கடும் பலத்தை எதிர்த்து நிற்க திராவிட முன்னேற்றக்கழகம் முன் வந்துள்ளது.

எட்டாண்டு கால வளர்ச்சி! தேர்தலில் முதல் தடவை! அதுமட்டுமல்ல: 150 இடங்களில் போட்டியிட முடிவு! நினைக்கும் பொழுது நமக்கே ஒருகணம் மருட்சிதோன்றுகிறது!

மறுகணம் மக்கள் பக்கத்தில் இருக்கிறோம் என்ற எண்ணம் மகிழ்ச்சியூட்டுகிறது! எதேச் சாதிகாரத்தை எதிர்த்திட நாட்டுக்கு நலி வைத்தரும் தான்தோன்றி ஆட்சியை எதிர்த் திட வாய்ப்பு கிடைத்தது குறித்து பெருமை யடைகிறோம்! காங்கிரசின் பணபலத்தைவிட, நமது கொள்கை பலம் அதிகமானது என்ற எண்ணம் வெற்றி தோல்வி கண்டு கலங்காத உறுதியை நமக்குத் தருகிறது!

காங்கிரசு பணத்தைத் தட்டிக் காண்பித்து, தேர்தலுக்கு மக்களைக் கூப்பிடுகிறது. பணப் பெட்டியைத் திறந்துவிடுவதன் மூலம் ஓட்டுப் பெட்டிகளை நிரப்பிக்கொள்ளமுயலுகிறது! பணத்தைக் கொடுத்து, பர்மிட்டுகளைக் கொடுத்து ஓட்டுக்கேட்கிறது காங்கிரசு!

நம்மிடம் எதுவுமில்லை! இருந்தாலும் ஓட்டுக் கேட்கிறோம், கொள்கையைச் சொல்லி, திட்டங்களைச் சொல்லி!

பணத்தைக் கொடுத்து ஓட்டுகளைப் பெறக் காங்கிரசு திட்டமிடுகிறது!

பணம், ஓட்டு இரண்டையுமே பொதுமக்களிடமிருந்து நாம் எதிர் பார்க்கிறோம்!

மண்ணை நம்பி மரமிருக்க என்று பாடுவார்கள். அதைபோல, மக்களை நம்பி, மக்கள் நமது கழகத்துக்கு நல்லாதரவு தருவார்கள் என்ற நம்பிக்கையின்மீது கழகம் இருக்கிறது.

தேர்தலில் 150 இடங்களில் திராவிட முன்னேற்றக்கழகம் நிற்கிறது என்றால் 150 இடங்களில் போட்டியிடு மாறு திராவிட முன்னேற்றக் கழகத்தை மக்கள் காட்டிய ஆர்வம் செய்துள்ளது. எனவே 150 இடங்களில் கழகம் நிற்கிறது என்றால், பொதுமக்களின் ஆர்வத்தையும் கழகத் தோழர்களின் இடையரு உழைப்பையும் முதலாக வைத்துதான் அந்த முடிவு எடுக்கப்பட்டுள்ளது.

தேர்தல் நெருங்க, நெருங்க, பேசாத தேசியதலைவர்கள்கூட பீரங்கிகள்போல கர்ச்சனை செய்யத் தொடங்கலாம், சென்ற தேர்தலுக்குப்பின் காரையோ, கனம்களையோ கண்டறியாத சிற்றூர்களுக்கு மந்திரிகள் வரவு தருவார்கள்! ஆள், அம்பு, அதிகாரம் உத்தரவு, கட்டளையென ஆளுங்கட்சியினர் தமது பலம் முழுவதையும் கட்டவிழ்த்து விடுவார்கள்! தாக்கிப்பேசுதல், தாறுமாறாக ஏசுதல், கொள்கையைவிட்டுக் குற்றங்களைத் தேடுதல், பழிதூற்றல், எனத் தேர்தல் பிரச்சாரம் சந்தைக் கடை வாய்ச்சண்டைபோல உருவெடுக்கலாம்! இதுதான் சமயமென சில இடங்தேடிகள் பணந்தேடும் படலத்தில் ஈடுபட்டுவிடலாம்!

கழகத்தோழர்கள், எத்தகைய சூழ்நிலையிலும் கண்ணியமும் கட்டுப்பாடும் குன்றாவகையில் கடமையாற்ற வேண்டும்!

150 இடங்களில் கழகம் போட்டியிடும் என்ற செய்தி, கழகத் தோழர்கள் பலருக்கும் மட்டற்ற மகிழ்ச்சியைத் தரும். எழுபது ஆண்டு காலமாய்ப்பணியாற்றி, இரும்புக் கோட்டை போன்ற பாதுகாவலுடன் ஆட்சிபுரிந்து வரும் கட்சியை எட்டாண்டுகாலமாய் இயங்கி வரும் கழகம் போட்டியிடுகிறது! 150 இடங்களுக்குப் பரவிய நீண்ட போர்க்களத்தில் போராடுகிறது! நாட்டுக்கு ஆற்றும் கடமைகளில் இதுவும் ஒன்று என்ற நல்லெண்ணத்தில் கழகம் தேர்தலில் ஈடுபடுகிறது. நல்லாட்சி நடைபெற எதிர்க்கட்சிகள் தேவை என்ற நம்பிக்கையில் கழகம் தேர்தலில் ஈடுபடுகிறது; திராவிடத்தின் குரல் சட்டசபைக்குள்ளும் ஒலிக்கவேண்டும், நமது இலட்சிய போராட்டத்தில் சட்டசபையும் ஒரு பாசறையென்ற எண்ணத்தில் கழகம் தேர்தலில் ஈடுபடுகிறது! "நாங்களே அரசாங்கம். அரசாங்கம் எமதே" என ஏறிட்டபார்வையுடன் எதேச்சாதிகார ஆட்சி செலுத்தும் ஆட்சியாளர்களுக்கு, அபாய அறிவிப்பாக கழகம தேர்தலில் ஈடுபடுகிறது! ஆட்சியின் பேரால் நடைபெறும் அலங்கோலங்களை வெளிப்படுத்திக் காட்ட, ஐந்தாண்டு திட்டங்களின் பேரால்தென்னகத்துக்கு இழைக்கப்படும் அநீதிகளை எடுத்துச் சொல்ல, கழகம் தேர்தலில் ஈடுபடுகிறது!

நூற்றைம்பது இடங்களில் கழகம் போட்டியிடுகிறது என்றால், நூற்றைம்பது களங்களைக் கொண்ட பெரும போராட்டத்தில் கழகம் ஈடுபடுகிறது எனபதை கழகத் தோழர்கள் கவனத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். தேர்தலில் கழகம் ஈடுபடுகிறது என்று கேட்டதும் ஏற்படுகிற மகிழ்ச்சியுடன், அதனால் உண்டாயிருக்கும் பொறுப்பின் அளவையும் உணர்ந்து கழகத்தோழர்கள் செயலாற்றத் தொடங்க வேண்டும்!

ஓய்வு எடுத்ததுபோதும், எழுகவீரனே! செயலாற்று! எனக் கீழ்த்திசையில் செங்கதிரோன் தட்டி எழுப்புகிறான்!

செயலாற்றுங்கள்! செயலாற்றுங்கள்! செம்மல்களே! நாட்டின் செல்வங்களே! உங்கள் உழைப்பு என்றுமில்லாவாறு இன்று நாட்டுக்கும் கழகத்திற்கும் தேவைப்படுகிறது. செயல் செயப் புறப்படுங்கள்! சிந்தை களிகூறும் வெற்றிச் செய்திகள் பல உங்களைத் தேடிவரும்.



# ஆல்பிரட் நோபில்

(நஞ்சை இளம்மதி)

உலகத்தில் பலர் தோன்றுகின்றனர், வாழ்கின்றனர், பின் மறைகின்றனர். ஆனால் அவர்களுள் சிலர்தான் "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்ற வள்ளுவர் வாய்மைப்படி அறிஞர்களாக வாழ்ந்து உலகம் உள்ளளவும் தம்புகழ் அழியாது மாபெரும் செயல்களைச் சாதிக்கின்றனர். இதற்கு அவர்களின் சிந்தனை, சிறந்த கருத்துக்கள், மலை கலங்கினாலும் மனம் கலங்காத உறுதி, நல்லொழுக்கம் இவைகள்தாம் காரணம். இதற்குப் பல பெரியார்களை உதாரணமாக காட்டலாம். அவர்களுள் உலகப் புகழ் எய்திய அறிவியல் அறிஞர் "ஆல்பிரட் பெர்னட் நோபல்" (Alfred Bernhard Nobell) அவர்களும் ஒருவராவர்.

ஆல்பிரட் சுவீடனிலுள்ள ஸ்டாக்கோமில் (Stockholm) 1833-ம் ஆண்டு அக்டோபர் 21-ம் நாள் பிறந்தார். இவருடைய தந்தை எமானிவல் நோபல் என்பார் ஓர் அறிவியல் அறிஞர். எமானிவல் இரஷ்யாவின் சார் மன்னருக்காகச் செண்ட் பீட்டர்ஸ் பர்க்கில் (St. Petersburg) ஒரு நீர்மூழ்கிக்கப்பல் தொழிற்சாலையை நடத்தினார். இது நல்ல முறையில் நடந்து வந்தது. இதைத் தன்னுடைய இரண்டாவது மகன் லுட்விக் (Ludvig) மேற்பார்வையில் ஒப்படைத்துவிட்டு ஆல்பிரட்டை அழைத்துக் கொண்டு சுவீடன் வந்தார். இங்கு தந்தையும் தனயனும் நைட்ரோ கிளிசரினைப் (Nitro-glycerin) பற்றி ஆராய்ச்சிகள் செய்தனர்.

ஆராய்ச்சியினால் நோபல் குடும்பத்தினருக்குப் பல நட்டங்கள் ஏற்பட்டன. 1864ல் இவ்வெடியினால் ஆல்பிரட்டின் இளவல் எமிலும் (Emil) மற்றும் நான்கு தொழிலாளர்களும் உயிர் இழந்தனர். 1865ல் நார்வேயில் இவர்களுடைய தொழிற்சாலை இவ்வெடியினால் எரிந்து சாம்பலாகியது. இதே ஆண்டில் பனமா துறைமுகத்தில் இவர்களின் தொழிற்சாலைக்காக ஒரு கப்பலில் கொண்டுவந்த நைட்ரோ கிளிசரின் வெடித்ததால் கப்பலையும் அறுபது தொழிலாளர்களையும் இழக்க நேர்ந்தது. இதன்பின் சான்பிரான்சிஸ்கோ (San-francisco) வீதியில் இவர்களுடைய வண்டி ஏற்றிவந்த நைட்ரோகிளிசரின் வெடித்து பெரிய விபத்து ஏற்பட்டது.

இவற்றால் ஆல்பிரிட்டின் உள்ளம் கலங்கவில்லை. அபாயமில்லாது நைட்ரோ கிளிசரினைக் கையாளும் முறையைக் கண்டுபிடிக்க மிகத்தீவிரமாக ஆராய்ச்சி செய்தார். மூன்று பங்கு நைட்ரோவையும் ஒரு பங்கு கிஸ்சல்குர் (Kisselghur) எனும் உப்பையும் (இது சர்மனியில் அதிகம்) கலப்பதால் அபாயமின்றி கையாளலாம் என்பதைக் கண்டார். 1867ல் இம்முறையில் டைனமண்டை கண்டுபிடித்தார். ஆனால் இன்னும் அதிக வேகமுள்ள டைனமண்டை 1876ல்தான் கண்டுபிடித்தார். இது நைட்ரோவும் கன்காட்டனும் சேர்ந்த கலவையினால் செய்யப்பட்டது. இதற்கு "பிளாஸ்டிங், கிளட்டின்" எனப் பெயரிட்டார்.

இவ்வாராய்ச்சிகள் உலகின் நன்மைக்குப் பயன்படும் என்று மகிழ்ந்தார். சாலைகள் போடவும், பூமிக்கடியிலுள்ள சிறந்த கனிப் பொருள்களைத் தோண்டிடவும், பூமிக்கடியில் போக்குவரவு சாதனங்கள் அமைக்கவும், மலைகளைக் குடையவும், இவ்வாராய்ச்சிகள் பயன்படுமெனக் கனவுகண்டார். ஆனால் இவை பல உயிர்களை அழிக்கும் போர்க்கருவிகளாய்ப் பயன்படுத்தப்பட்டன. இன்றைய பயங்கரமான குண்டுகள், டைனமண்டுகள் இவைகளுக்கெல்லாம் இம்முறை பயன்படுத்தப்படும் என்று அவர் கருதவில்லை. இவருடைய ஆராய்ச்சிகள் பல உயிர்களை அழிக்கப் பயன்படுத்தப்பட்டன அரசியல் சூதாடிகளால். ஆக்க வேலைக்குப் பயன்படவேண்டிய சாதனம் அழிவு வேலைக்கு பயன்படுத்தப்பட்டது. இதைக்கண்டு இவர் உள்ளம் வாடியது. மனம் துடித்தார். இதனால் மனோவியாதியால் படுக்கையில் சாய்ந்தார். இவர் ஐம்பது வயதாகியும் திருமணம் செய்துகொள்ளவில்லை. இவர் இளமையில் காதலித்த நங்கை திருமணமாகுமுன் இறந்துவிட்டாள்.

இவர் தம் இறுதிகாலத்தில் தம் பொருள்களை யெல்லாம் உலக சமாதானத்திற்காகவும், ஒற்றுமையையை வளர்க்கவும் செலவு செய்தார். இருந்தும் இவர் உள்ளம் அமைதி பெறவில்லை. இவ்வாறு கலங்கிய உள்ளத்துடன் உலகப்புகழ் வாய்ந்த அறிவியர் அறிஞர் ஆல்பிரட் பெர்னட் நோபல் 1896ம் ஆண்டு டிசம்பர் மாதம் 10ம் நாள் மறைந்தார். இறங்கும்போது பலகோடிடாலர் மதிப்புள்ள இவருடைய சொத்துகளை ஒரு பாதுகாப்புக் குழுவசம் ஒப்படைத்தார். உலகில் இயற்கைப் பொருளியல் (Phyiscs) இயையியல் (Chemistry) சிறந்த இலக்கியம், மருத்துவம், சமாதானம இவைகளுக்குப்பாடுப்பட்ட சிறந்த அறிஞர்களுக்கு, ஆண்டுதோறும், இக்குழு நோபல் அவர்களின் நினைவால் நோபல் பரிசு (Nobel Pri2e) என்னும் உலகப் புகழ் வாய்ந்த பரிசை ஆண்டுதோறும் வழங்கிவருகிறது.

# கொடைக்கானல்

[அவ்வை. துரைசாமி]



தமிழ் நாட்டில் உள்ளவர்களுக்குக் கோடைக்கானல் நன்ருகத் தெரிந்த இடம். இதனைக் கொடைக்கானல் என்று இக்காலத்தில் கூறுகின்றனர். இதன் உண்மைப் பெயர் கோடைக்கானல் என்பது. இது மதுரை மாவட்டத்தில் மேற்கு மலைத் தொடரிலிருந்து பிரிந்து கிழக்கு நோக்கித் திண்டுக்கல்வரை நீண்டு தொடர்ந்து நிற்கும் மலைமேல் உள்ளதொரு சிறு நகரமாகும். இம்மலையை ஆங்கிலேயர் பழனிமலைத் தொடர் என்பர். கோயம்புத்தூருக்கு மேற்கில் நிற்கும் மலைத் தொடரின் முடிமேல் அமைந்த தடவின்கண் விளங்கும் நீலகிரி நகரம்போல் இது மதுரை மாவட்டத்தில் உள்ளது. நீலகிரி செல்லுதற்கு மலை மேற்சாலையொன்றும் இருப்புப்பாதையொன்றும் உண்டு. கோடைக்கானலுக்கு மலைமேற் சாலையொன்றுதான் இருக்கிறது. அம்மைநாய்க்கனூர் (கொடைக்கானல் ரோடு) புகைவண்டி நிலையத்திலிருந்து நிலக்கோட்டை, வத்தலகுண்டு என்னும் பேரூர்களின் வழியாக இச்சாலை கோடைமலைக்குச் செல்லுகிறது. கோடைக்கானல் நகரம் கடல் மட்டத்துக்குச் சுமார் 7000 அடிக்குமேல் உள்ளது. இங்கே வானிலையாராய்ச்சி நிலையம் இருக்குமிடம் கடல் மட்டத்துக்கு 7209 அடி உயரமாகும்.

## இயற்கையமைதி

கோடைக்கானல் நகரம் நகராண்மைக் கழகத்தால் கண்காணிக்கப் பெறுகிறது. இங்கே மதுரையிலும் பிற நகரங்களிலும் உள்ள பெருஞ் செல்வர்களுடைய பெருமனைகள் பல உள்ளன. இங்குள்ள தடவு ஒன்றில் ஓடிய சிற்ருற்றைத் தடுத்து ஓர் அழகிய நீர்நிலையாக்கியுள்ளனர். அதனைச் சுற்றிலும் அழகிய சாலையொன்று போடப்பட்டுள்ளது. இதனைச் சூழ்ந்து நிற்கும் மலைச்சரிவில் இருள்படத் தழைத்த சோலைகட்கிடையே மேலேயுரைத்த செல்வப் பெருமனைகள் திகழ்கின்றன. இத் தடவின் மேலை மலைச் சரிவில் அமைந்துள்ள மீனாட்சி பெருமனை யென்பது ஏனைப் பெருமனைகள் எல்லாவற்றிலும் சிறப்பும் வேலைப்பாடும், இயற்கையமைதியும் கண்கவர் வனப்பும் கொண்டது. அதன்கண் இருந்து நோக்கினால், கிழக்குப் பகுதியொழிய ஏனைய மூன்று பகுதிகளும் மலை முகடுகளால் சுவர் வைத்ததுபோல் காட்சிதரும். கிழக்கில் பிளவு தோன்றிச் சிறிது தொலையில் மரஞ்செடிகளின் செறிவின்றி வானுற ஓங்கி நிற்கும் பெரு மாமலையைக் காட்டுகிறது. அதனையடுத்து இருமருங்கிலும், இடையிலும் சிறுசிறு குன்றுகளும் மேடு பள்ளங்களும் பரந்து கிடக்கின்றன. மக்கட் பெருக்கமும் கடைத்தெருவின் கம்பலையும், தடவின் நீர் நிலையை மாசுபடுத்தாவண்ணம் அது நகரின் மேற்கில் மலை முகடுகளால் காக்கப்பட்டிருப்பது அதன் அழகை மிகுதி செய்கிறது. மாலைப்போதுகளில் அந் நீர்நிலையில் செல்வமக்கள் சிறுபடகுகளில் ஏறி அங்கு மிங்கும் உலா வருவர். கரை மருங்கில் சுற்றி வரும் சாலையில் ஆடவரும் மகளிரும் உள்ளம் கவரும் உயரிய ஆடையணிகளால் தம்மை ஒப்பனை செய்துகொண்டு உலவி இன்புறுவர். இருள் மாலையில் நகரமெங்கணும் மின் விளக்குகள் வரிசை வரிசையாக நின்று பொருளுடைச் செல்வரின் பொன் மேனியின் பொலிவையும் போகவாழ்வின் பொற்பையும் மேம்படுத்திக்காட்டும். வெண்ணிறமுடைய மேலை நாட்டவரும், அவர் தொடர்பிடைத் தோன்றிய வெண் கிளைகளும் (Anglo Indians) மாநிறம் கொண்ட தமிழ்ச் செல்வரும் மயங்கு நிறமுடைய பிறரும் கோடைமலைத் தடவில் கூடியுறையும் காட்சி கண் பெற்ருர் கண்டு இன்புறத்தக்க ஏற்றமும் எழிலும் கொண்டு இலங்குகிறது.

எழிலாலும் பொழிலாலும் ஏற்றம் பெற்று விளங்கும் இக் கோடைக்கானல் ஏன், எப்போது உண்டாயிற்று?

## வெள்ளையர் தொடர்பு

கி. பி. 1751க்குப்பின் மதுரை நாடு ஆங்கிலேயர் தொடர்பு பெறுவதாயிற்று. அப்போது அவர்கள் முகமதியத் தலைவர்களிடையே போர் செய்யும் வகையில்தான் இத் தொடர்பைப் பெற்றனர். 1781ல் ஆங்கிலேயருக்கு முதன்முதலாக ஆட்சித் தொடர்பு உண்டாயிற்று. ஜார்ஜ் புரோக்டர் என்பவர் தான் முதல் தண்டல்நாயகம் (கலெக்டர்) ஆக மதுரைப் பகுதிக்கு வந்தார். பிறகு படிப்படியாக ஆங்கிலேயர் இந்த நாட்டில் வேரூன்றி ஆட்சியிடம் கொள்வாராயினர். அதற்குப்பின் நாளடைவில் பெருகிவந்த ஆங்கிலராட்சியில் கி. பி. 1821ல் பழனிமலைப் பகுதியில் நில அளவு செய்தற் பொருட்டுச் சென்ற பி. எஸ். உவார்டு என்பவர்தான் கோடைக்கானலில் முதலில் கால்வைத்த வெள்ளையராவர். அவர்க்குப்பின் 1834ல் ஜே. சி. ராப்டன் சி. ஆர். காட்டன் என்ற இருவர் செண்பகனூர் வரையில் சென்று திரும்பினர். 1836-ல் உவைட் என்பவர் அடுக்கமலை வழியாகச் செண்பகனூர் வரைக்கும் சென்ருரேயன்றி அதற்குமேல் கோடைக்கானலுக்குப் போகவில்லை. இக்கோடை மலைப்பகுதிக்குச் சென்று வந்த இவர்களால் அப்பகுதியின் தட்ப வெப்பநிலையின் இயல்பு வெள்ளையர்கள் இடையே ஓரளவு தெரிந்திருந்தது.

## நகரம் தோன்றியது

அந்நாளில் மதுரையில் அமெரிக்கக் கிறித்தவப் பாதிரிமார்கள் தங்கிச் சமயத் தொண்டு புரிந்தனர். அவர்கட்கு மதுரை மாநாட்டு வேனில் வெம்மை தாங்க வொண்ணுததாயிருந்தது. அதனுல் அவருட்சிலர் நோயுற்றனர்; அவர்கள் கப்பலேறி யாழ்ப்பாணத்துக்குப் போக வேண்டிய நிலையும் உண்டாயிற்று. அந்நிலையில் சிறுமலையின் முகடு குளிர்ச்சியுடையதென்று அறிந்தோர் கூறவே, யாழ்ப்பாணச் செலவைக் கைவிட்டுச் சிறுமலையில் தங்குவதென முடிவு செய்தனர். பின்னர், சிறுமலையின் நிலையும் அவர்கட்கு நன்மை தரவில்லை அங்கேயும் அவர்களைக் காய்ச்சல்நோய் தோன்றி வருத்திற்று. அப்போது அவர்கட்குக் கோடைமலையின் தட்ப வெப்ப நிலையின் இயல்பு தெரிய வந்தது. ஏழாண்டுக்குப் பின்பு, அதாவது கி. பி. 1845ல் அவர்கள் கோடைமலைப் பகுதிக்குச் சென்று இரண்டு பெருமனைகளை (வங்களா)க் கட்டிக்கொண்டனர். அவர்கட்குப் பின்னர், 1846-47ல் ஜான் பிளாக்பான் என்பவரும், 1848-49ல் தாமஸ் சிளார்க், சி. ஆர். பேயினஸ், ஆர். டி. பார்க்கர் ஆகிய மூவரும் மூன்று வீடுகள் கட்டினர். இவருள் சிளார்க் கட்டிய பெருமனையில் தான் கால்டுவெல் பாதிரியார் பலநாள் தங்கி உயிர் நீத்தார் என்பர். 1852-ல் மேஜர் ஜெ. எம். பார்ட்டிரிட்ஜ் என்பவர் கோடைக்கானல் ஏரியின் கரையில் ஒரு பெரு வீடு கட்டினர்; இதற்கிடையே அமெரிக்கப் பாதிரிமார்களும், டபள்யூ. எச். ஆர் கலி என்பவரும் வீடுகள் கட்டிக் கொண்டனர். இவ்வகையில் சென்னை மாநிலத்தை யாண்ட மண்டலருள் (கவர்னர்) 1860-ஆம் ஆண்டின் முதன் முதலில் சர். சார்லஸ் டிரெவிலியான் என்பவர், கிருஷ்ணமநாய்க்கன் தோப்பு வழியாகக் கோடைமலைக்குச் சென்ருர். 1871ல் லார்டு நேப்பியர் என்ற மண்டலர் கோடைமலைக்கு வந்தாரென்றும், அங்குள்ள நேப்பியர்வில்லா என்பது அவர் நினைவாகத் தோன்றியது என்றும் கூறுவர்.

மதுரை மாநாட்டிலிருந்து ஆட்சி நடத்திய தண்டல் நாயகர் (கலெக்டர்)களில் 1860-67 வரை சிறப்புற இருந்த வி. எச். லீவிஞ்சு என்பவர், தமது பதவியினின்று விலகி 1885 வரை கோடைமலையில் தங்கியிருந்தார் என்றும் அவர் இருந்த வீடு பாம்பாறு அகம் என்றும் அவர் வரலாறு கூறுகிறது. அவர் காலத்தில் கோடைக்கானல் நல்ல பல திருத்தங்கள் பெற்றது. பெரிய குளத்திலிருந்து பாம்படிச் சோலைவரையில் சாலை அமைத்ததன்றி, மேனுட்டுப் பூவகைகளையும் பழவகைகளையும் கொணர்ந்து கோடைமலையில் பயிர் செய்வித்தார். கோடைக் கானல் உள்ள தடவில் வெறிதே ஓடிய சிற்ருற்றை அணையிட்டுத் தடுத்து நீர் நிலையாக்கியவர் அவரே யாகும். மலைச்சாலை ஓரளவு திருத்தம் பெற்றது அவர் காலத்தேதான். அவர் வாழ்ந்த போது, கத்தோலிக்க கிறித்தவப் பாதிரியாரான அருள் திரு. கயர் (Father Saint Cyle) கோடைமலையைக் கண்டு அங்குள்ள பெரினஸ் பெருமனையை விலைக்கு வாங்கி அங்கே இப்போது விளங்கும் கத்தோலிக்க மாதா கோயிலுக்கு அடி கோலினர். 1899ல் கோடைக்கானலிலிருந்து பூம்பாறைக்குப் போகும் வழியில் உயர்ந்த ஓர் இடத்தில் வானிலை ஆராய்ச்சி நிலையம் அமைக்கப்பட்டது.

## பெயர்க் காரணம்

கோடைமலையை கோடைக்கானல் என்று ஏன் கூறுகின்றனர்? கானல் என்பது காணல் என்னும் ஒருவகைக் கொடியின் பெயர் என்றும், அக்கொடிகள் இம்மலைப் பகுதியில் மிக்கிருப்பதுபற்றிக் கோடை மலைக்காடுகோடைக்கானல் என வழங்குகிறது என்றும், இப்பகுதிக்குவந்த மேனுட்டவர்க்கு அக்காலத்தவர் உரைத்துள்ளனர். மலைச்சிக்கலால் வருந்தும் ஆன்கன்று, எருமைக்கன்று, மான்கன்று ஆகிய இவற்றுக்கு இக்காணற் குழையை உண்பிப்பது வழக்கமென்றும், காணற்குழை

யைக் கானலங்குழ், கானுங்குழை என்றும் அங்குள்ள மலை வாழ்நர் உரைக்கின்றனர். இத்தகைய கானல்கள் இம்மலைப் பகுதியில் பல உண்டு. அவற்றுள் கொச்சிக்கானல், வஞ்சன்கானல், கடியங்கானல், தாம்ற்கானல் என்பன இன்றும் சிறந்துள்ளன. இவற்றுள், கடியங்கானம் பெருநன் கானல் என்றும், தாமற்கானல், தாமிரக்கானல் என்றும் வழங்குவனவாகும்.

### வரலாற்றுக் குறிப்பு

இனி, கடற்கரைப் பகுதிகளில் புன்னை, ஞாழல் முதலிய மரங்கள் செறிந்த குளிர்ந்த சோலைகளைக் கானல் என வழங்குவதுண்டு. இக் கானல்களைப் போலக் கோடை மலைக்காடுகள் குளிர்ச்சி பயந்து இனிய பூக்கள் நிறைந்து விளங்குவது பற்றிக் கானல் எனப்பட்டன என்று கருதுபவரும் உண்டு; கடற்கரைக் கானற் சோலைகள் போலவே கோடைமலைக் காடுகள் சில கானல் எனப்படுவதேயன்றி புலிச்சோலை, பெருமாள் சோலை, குண்டன சோலை, கூகல் சோலை என்று கூறப்படுவதை நோக்கின் அவர் கருத்துக்கும் ஆதரவு உண்டென்று அறியலாம்.

இனி, இக்கோட்டைப் பகுதியில் பெருமாள் மலையின் தென் மேற்கிலுள்ள இடங்களிலும், பழமலைப் பகுதியிலும், பண்ணைக்காடு, தான்றிக்குடி, கர்மனூர், பாச்சலூர் ஆகிய இடங்களிலும் புதை பொருள்கள் பல கணப்படுகின்றன. தான்றிக்குடிக்கு அண்மையிலுள்ள காமனூர் பழையோரால் தாமனூர் என்றும் சொல்லப்படுகிறது. இவற்றை நோக்கும்போது ஒருகாலத்தே இங்கே மக்கள் வாழ்திருந்தனர் என்பதற்குறிய குறிப்புகள் வலியுறுகின்றன. இருநூறு இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் மதுரை மாநாட்டு ஆட்சி நாய்க்க மன்னர்கள் கையிலும் முகமதியத் தலைவர்கள் கையிலும் இருந்து வந்ததை நாட்டு வரலாறு நவில்கிறது. இடுக்கணும் இன்னலும் தோன்றிய போது நாயக்கக் குறு நிலத்தலைவர்கள் இம்மலைப் பகுதிக்குள் புகுந்து மறைந்துகொள்வதும் வாய்ப்பு உண்டானபோது வெளியே வந்து போர்செய்வதும் செயலாக மேற்கொண்டிருந்தனர். ஆயினும் அவர்கள் கோடை மலைப்பகுதி வரையில் சென்று ஒடுங்கியதாக அவர்களைப்பற்றிய குறிப்புகள் ஒன்றும் கூறுகின்றதில்லை.

அவர்கட்கு முன்னே இந்த மாநாட்டில் வாழ்ந்து அரசுசெலுத்தியவர் பாண்டியமன்னராவார். அவர்கள் வரலாற்றில் நிகழ்ந்த சிறப்புடைய நிகழ்ச்சிகள் பல செப்போடுகளிலும் கல்வெட்டுக்களிலும் காணப்படுகின்றன. அவர்கள் கோடைமலைத் தொடரிலுள்ள பழமையான இடங்கட்குச் சென்று தங்கியதாகவோ அங்கு வாழ்ந்த மக்களோடு தொடர்பு கொண்டிருந்ததாகவோ இதுகாறும் ஒரு குறிப்பும் காணப்படவில்லை. பாண்டி வேந்தரின் மிகப் பழைய குறிப்பு எனப்படும் வேள்விக்குடிச் செப்பேடு இதுபற்றிய குறிப்பு ஒன்றையும் தருகிறதில்லை.

### சங்க இலக்கியத் தொடர்பு

இச்செப்பேடுகட்கும் பழமையான சான்று பழந்தமிழ் இலக்கியங்களேயாகும், அவற்றுள் சங்க நூல்கள் ஓரளவு தக்க சான்றுகளாக நிற்கின்றன. அவற்றை நோக்கின் கோடை மலையையும் தான்றிக் குடியையும் பற்றிய குறிப்புக்கள் அகப்படுகின்றன. அவற்றின் காலம் கி. பி. இரண்டாம் நூற்றுண்டுக்கு முற்பட்டதென ஆராய்ச்சியாளர் வரம்பறுத்துள்ளார். ஆகவே சுமார் ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன் இக்கோடைமலைப் பகுதியும் பிறவும் நாட்டு மக்கள் வாழ்வில் தொடர்பு பூண்டிருந்தன என்றும் அத்தொடர்பு பற்றியே இருநூறு ஆண்டுகட்கு முன் இங்கே வந்து தங்கிய மேனுட்டு மக்கள் இக் கோடைமலைப் பகுதிகட்குச் சென்று காணும் செவ்வி பெற்றனர் என்றும் இதுகாறும் கூறியவற்றுல் பெறப்படும்

நம் தமிழகத்தில் மேனுட்டவர் தங்கள் ஆட்சியை நிறுவியகாலையில் வேனிற்காலத்து விடுதிக்காக நீலகிரியைத் தேர்ந்து கொண்டதற்கும் இதுவே தொடர்பாகத்தெரிகிறது. அப்பகுதி சங்ககாலத்தில் பாயல்மலைக்குரிய சேரமான் வஞ்சனுக்கு உரியதாகும். அவனைத் திருத்தாமனர் என்னும் சான்றோர் பாடியிருக்கின்ருர். பாயல் மலையிலுள்ள அவனது "பெரும்பெயர் மூதூர்" வஞ்சன் குன்று என்பது, அஞ்சன் குன்று எனத்திரிந்து பிற்காலக் கல்வெட்டுக்களில் அஞ்சனகிரி என மாறி இப்போது நீலகிரி என மொழி பெயர்க்கப்பட்டு அரசியல்மேலோரும் பெருஞ்செல்வப் பெரியோரும் கோடை விடுதியாகத் தங்கி இன்புறும் சிறப்புக்கொண்டு விளங்குகிறது. வஞ்சன் ஆட்சியிலிருந்த வஞ்சனுடைய அஞ்சனுடாகித் திருவிதாங்கூர் மன்னராட்சியில் கோடை மலைப்பகுதியின் வடமேற்கில் இருக்கிறது. அவன் பெயரால் இப்பகுதியில் உள்ள தொருகானல் வஞ்சன்கானல் என்றபெயருடன் இன்றும் உளது. இதனுல் கோடைக் கானல் சங்க காலத்தே தமிழகத்துத் தமிழ் வாழ்க்கை நிலவிய இடம் என்பது தென்னெனத் தெளிவாகும்



# ஆங்கிலேயர் காலத்தில் தமிழ்நாடு

டாக்டர் எம். எஸ். வைரண பிள்ளை, M. A. Ph. D.



உலகின்கண் தோன்றிய மக்களுள் முதலில் தோன்றியவர்கள் என்றும், கல்தோன்றி மண்தோன்ருக் காலத்தே முதன்மையாக வாழ்ந்த குடியினர் என்றும் போற்றிப் பாராட்டப்பெற்றவர்கள் தமிழர்கள். அவர்கள் வாழ்ந்த நாடு பன்னெடு நாட்களாகத் தமிழ் நாடு என்றே அழைக்கப்பெற்றது. இந் நிலையில் வாழ்ந்த தமிழ்ப்பெருமக்கள் ஈடும் இணையுமின்றிச் சிங்களம், புட்பகம், சாவகம் முதலிய கீழைத்தீவுகளுடனும் உரோமர், கிரேக்கர் முதலிய ஐரோப்பிய நாட்டினருடனும் வணிகத் தொடர்புகொண்டு விளங்கினர் என்பதைத் தமிழ் நூல்களினின்றும் சில மேலைநாட்டு வழிப்போக்கரின் குறிப்புக்களினின்றும் அறிகின்ருேம்.

வெளிநாட்டினர் பலரும் தமிழகத்தின்கண் வந்து மங்காப் புகழ்கொண்டு வாழ்ந்தார்கள்—வாழ்கினருர்கள். இந்நிலையில் தண்டமிழ் நாட்டின்கண் வந்த ஐரோப்பியர்கள் செந்தமிழ்மொழியைக் கற்று ஆய்வுத்திறனுடையராய்த்திகழ்ந்து மொழிக்குச் செய்த தொண்டினையும், அதனடியாக மக்கள் கல்வி வளர்ச்சிக்குச் செய்த பணியினையுமே இக் கட்டுரையில் சுருக்கமாகக் கூற விழைகின்றேன்.

வெளிநாட்டார் நமது நாட்டிற்குப் பதினேந்தாம் நூற்றுண்டின் இறுதியில்வந்து, பல இடங்களில் தங்கித் தங்களது வாணிகத் தொழிலை மேற்கொண்டு வாழ முற்பட்டனர். அவர்களுள் பதினரும் நூற்றுண்டில் நிரந்தரமான இடம் அமைத்து வாணிகத்தொடர்பு ஏற்படுத்தியவர்கள் ஆங்கிலேயர் பிரெஞ்சுக்காரர் எனக் குறிக்கலாம். வாணிகம்பேணி வந்த ஆங்கிலேயர்கள் தங்களது மதத்தைப் பரப்பவும், அதில் மக்களைச் சேர்க்கவும் முயன்றனர்.

மதக் கருத்துக்களை மக்களுக்குப் போதிக்க வந்த குருமார்கள் தங்கள் கருத்தை நமது தமிழ் மக்களுக்குக் கூற, அவர்கள் தமிழறிந்தாரில்லை. அவர்கள் மொழியில் கூறப்படும் கருத்துக்களை ஏற்கவோ நம்மக்களால் முடியாது. இந்நிலையில், அவர்களுடைய கொள்கை நிறைவேற்றத்திற்கு மொழி தடையாக இருந்ததால், வந்த பாதிரிமார்கள் தமிழ் மொழியினைக் கற்கத்தொடங்கினர். அது காரணமாகத் தமிழ்மொழியிற் சில மாறுதல்—வளர்ச்சி ஏற்படலாயிற்று. சிறப்பாக ஆங்கிலேயர் காலத்தில்தான், தமிழ் மொழியில் அதிகமான உரைநடை நூல்கள் ஏற்படலாயின. அதற்குமுன் அங்நிலை ஏற்படாமைக் குக்காரணம், மக்கள் தாங்கள் எண்ணிய கருத்தினை ஓலைச்சுவடியிலோ கல்லிலோ பொறித்திடக்கூடியவர்களாக இருந்ததேயாம்.

முதன் முதலாக ஆங்கிலேயர்கள் அலுவலகப் பணிக்கும், ஏனைய செயல்களுக்கும் துணை ஏற்படுத்திக்கொள்ளுவான் வேண்டிச் "சென்னைக் கல்விச்சங்கம்" என்ற ஒன்றை ஏற்படுத்தினுர்கள். இச்சங்கம் பத்தொன்பதாம் நூற்றுண்டில் தோற்றுவிக்கப் பெற்ற போதிலும் இச்சங்கத்தால் தமிழ்மொழி வளர்ச்சி ஏற்படவில்லை. ஆனல் அலுவலகங்களில் பணிபுரிபவர்கள் தமிழ் கற்றுக்கொள்ளவே பயன்பட்டது. என்ருலும் பாதிரிமார்களே நம் தமிழைக்கற்று அதன் வளர்ச்சிக்கும்—மாறுபாட்டுக்கும் காரணமாக விளங்கினுர்கள்.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் அரசியல் குழப்பம் நீங்கி அமைதியான ஆட்சியை உண்டாக்கிக் கொண்ட ஆங்கிலேயர்கள், நமது நாட்டு மக்களின் கல்வியில் கருத்தைச் செலுத்தி—"கண்ணுடையரென்போர் கற்ருேர்" எனப் பொய்யாமொழியார் புகன்றுள்ளபடி மக்களைக் கண்ணுடையவர்களாக்க எண்ணி நாட்டின் பல பகுதிகளிலும் பள்ளிக்கூடங்கள் நிறுவினர். சில அரசாங்கத்தாரால், பல பாதிரிமார்களால், மற்றும் சில தனிப்பட்ட மனிதர்களால் நிறுவப்பட்டன. இவற்றுள் பின்னுள்ள இரண்டும் அரசாங்க உதவிபெற்றே நாட்டில் கல்விப் பணி புரிந்துவந்தன.

இக்காலத்தில் உரைநடை நூலின் இன்றியமையாமையை உணர்ந்து பல உரைநடை

நூல்களை எழுதத் தொடங்கினர். அதோடு ஐரோப்பிய முறையில், இலக்கியம், நிலநூல், சரித்திரம் முதலியவற்றை உரைநடையில் ஆக்க முற்பட்டனர். படிப்போருக்குப் பண்டை வழக்கப்படி "உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்" இன்றித் தனித்த உரைநடை நூல்கள் தோன்றலாயின. எழுதப் பெற்ற நூல்கள் எழுதிய சிலருக்கேயன்றிப் பிறருக்கும் பயன்படும் வகையில் ஆங்கிலேயர்கள் தங்களது நாட்டினின்றும் அச்சுப் பொறியைக் கொண்டுவந்து அச்சிட்டு, அனைவரும் அந்நூல்களின் பயனைப்பெறுமாறு துணைசெய்தார்கள். ஆங்கிலேயர்களால் ஏற்படுத்தப்பெற்ற "சென்னைக் கல்விச்சங்கம்" ஏற்படுத்திய பரிசுகளின் காரணமாக வரலாற்று நூல்களும் வெளிவந்தன. அதோடு உரைநடை இலக்கண நூல்களும் தோன்றின். இந்நூற்றுண்டின் இறுதியில்தான் செய்தித்தாள்கள்—நாள் வெளியீடுகள் வார வெளியீடுகள் நாட்டில் நடமாடலாயின.

இவ்வாறு அச்சுப்புத்தகம் நாட்டில் நடமாடத் தொடங்குமுன்னர், மக்கள் ஓலையில் எழுதியும், செவிவழி கேட்டும் தங்களது கல்வியறிவை வளர்த்துவந்தனர். ஆனால் பின்னர் ஆங்கிலேயர்கள் நம் தமிழ் நாட்டிற்கு வந்து தமிழ் கற்று, எழுத்தறிந்து, தம் நாடு சென்று தமிழில் அச்செழுத்தை உண்டாக்கித்தமிழ் எழுத்தாலான புத்தகங்களை முதல் முதலில் நம் மக்கள் காணத் துணைசெய்தார்கள். அதிலும், அலைபாடிக் கலைவளர்க்கும் அழகு நகராம் தரங்கம்பாடியில் பதினெட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்த டேனிஷ்மிஷன் தலைவர் ஸிகன்பால்கு அய்யர் அவர்கள் உள்ளத்தெழுந்த எண்ணமே நமக்கு அச்சுக்கலையைத் தந்தது. அன்னார் தமிழ்த் தொண்டு போற்றற்குரிய தொன்றே.

பழந்தமிழ் இலக்கியங்களில், விஞ்ஞானக் கருத்துக்களும், நிலநூல் கருத்துக்களும், பிறவும் காணப்படினும், அவற்றை எளிய முறையில் அனைவருக்கும் ஏற்ப ஆக்கியருளிய பெருமையான காலம், ஆங்கிலேயர் வாழ்ந்த காலந்தான் என்றால் எவரும் மறுக்கமாட்டார்கள். கணித நூல், வான நூல் முதலியனவும் தமிழில், தமிழ் மக்களிடம் மிகுதியாக உண்டு. அவற்றை ஒரு சிலரே உணர முடிந்தது—உணர்ந்திருந்தார்கள். ஆனால் இன்று ஆங்கிலேயர்களால் எளிதாக எவரும் அறிந்துகொள்ளும் வகையில் அந்நூல்கள் ஆக்கப்பெற்றுள்ளன. இது ஆங்கிலேயர் காலத்தில் தமிழ்நாட்டுக்கு ஏற்பட்ட பெரு நன்மைகளுள் ஒன்றேயாம்.

தமிழ் நாட்டில் இடைக்காலத்தில் பல்வேறு மூட நம்பிக்கைகளில் தங்களுடைய எண்ணத்தைச் செலவிட்டதோடு காரணமின்றிப் பிரிந்து வாழ்ந்தும், பகுத்தறிவற்ற நிலையில், ஒன்றுபட்டு வாழாது பிறருக்கு அடிமையாக வாழ்ந்தும் அது காரணமாகப் பொருளாதாரத்தில் தாழ்ந்த நிலை, அரசியலில் தாழ்ந்த நிலை அன்றுட வாழ்விலும்கூடத் தங்கம் பிக்கையின்றித் தம்மைத்தாமே தாழ்த்திக் கொண்டு மக்கள் வாழ்ந்தார்கள். இந்த நிலைமை இன்று மாறி இருப்பதற்கு அடிப்படைக் காரணம் என்ன? சமுதாயம் என்றால் என்ன? அதன் அமைப்பில் நாம் யார்? அதில் உண்டாகும் மாறுபாடு எதனைச் செய்யும்? என்பனபோன்ற கருத்துக்களை உணர்ந்து வாழ்ந்த நாம், இடைக்காலத்து அவற்றை மறந்தோம்; வள்ளுவர் வாக்கை மறந்தோம். எனினும், ஆங்கிலேயர் காலத்தில் அவர்களுடைய சொல்-செயல்- கலந்து பழகும் முறை இவற்றைக் கண்ட பின்னரே நமது திருவள்ளுவரால் கூறப்பெற்ற சமுதாயம் எப்படி இருந்தது என்பதையும், அரசியல் எப்படி இருந்தது என்பதையும் பொருளாதாரத்தில் நாம் எப்படி இருக்கவேண்டும் என்பதையும் உணர முற்பட்டிருக்கிறோம்.

திருவள்ளுவரின் வாக்குப்படி "நயத்தக்க நாகரிகமே" வேண்டுபவராக நாம் சமுதாயத்தில் பழக வேண்டும். அவ்வாறு பழகும் முறை நம்மிடம் இருப்பினும், அதனை மறந்தோம்; இன்று நினைவுக்குக் கொண்டுவர வேண்டும்.

பொருளாதார நிலையினை ஆராய முற்பட்டால் நம்மிடம் காணும் குறைபாட்டினை நாம் இன்னும் போக்கிக்கொள்ள முற்பட வேண்டும். வருவாய்க்குத் தக்கசெலவு செய்தல், மிகுதியும் செலவிட்டு வருந்துகின்ற நிலை இவற்றை யெல்லாம் நமது பொது மறையிலிருந்து ஆங்கிலேயர் அறிந்து கடைப்பிடித்து வருகின்றனர். செந்நாப் போதார், "நமக்கு வருவாய் குறைவாக இருந்தாலும் கவலை இல்லை. ஆனால் செலவு அந்த வருவாய்க்கு மேல் போகலாகாது" என்ற கருத்தை மிக அழகாக ஆங்கிலேயர் காலத்துக்கு முன்னரே கூறிப் போந்தார்.

"ஆமா றளவிட்டி தாயினும் கேடில்லை
போகா றகலாக் கடை."

என்ற நிலையில் நாம் பொருளாதாரத்தில் செம்மையுடன் வாழ நமக்கு வழிகாட்டியவர்கள் பலராவர்.



அரசியலில் மக்கள் நலங்கேட்டு அவர்களுக்காக வாழ்பவனே அரசன்—அரசாட்சி ஆகும். அங்கிலை உணர்ந்த அரசே சிறப்புடனிருக்கும் என்ற நிலைமையை உணர்ந்து நடக்க வழிகாட்டியவர் வள்ளுவரானாலும் அதனை நாம் கண்கூடாகக் கண்டு உணரச் செய்தவர்கள், ஜனநாயகத்திற்குத் தங்களுடைய பிற்கால ஆட்சியின்போதாவது மதிப்புக்கொடுத்து நடந்து காட்டியவர்கள் ஆங்கிலேயர்கள்.

## மொழி

மிகப் பெரிய ஒரு நாடும் தனது மொழியில், இலக்கியத்தில், கலையில், பண்பாட்டில் கவனம் கொள்ளாமல் இருக்குமேயானால் அந்நாடு மிக விரைவில் தாழ்ந்து தன் நிலையில் கெடும் என்பதை ஆங்கிலப் பெருமக்கள் வாக்கிலிருந்தும், நமது புரட்சிக்கவிஞர் பாரதிதாசன், "இமயமலைபோல் உயர்ந்த ஒரு நாடும் தன் மொழியில் தாழ்ந்தால் வீழும்" என்று கூறிய மொழியிலிருந்தும் அறிகிறோம். ஆங்கிலேயர்கள் தங்கள் மொழியில் நீங்காப் பற்றும் பிறமொழிகளை விரும்பிப் படிக்கும் பண்பும் பெற்றிருப்பதை நாம் காண்கிறோம்.

அம்முறையிலேயே நம் தமிழ் நாட்டின்கண் மதத்தைப் பரப்பவந்த பாதிரிமார்கள் தமிழ் மொழியை விரும்பிப் படித்து அதிலுள்ள சுவையை உணர்ந்து அதனிடத்து நீங்காத பற்றுக்கொண்டு வாழ்ந்தார்கள்; அதோடு அம்மொழியின் சிறப்பையும் அதில் காணும் இலக்கியத்தின் உண்மைப் பொருளையும் இலக்கணத் திறனையும் உலகறியச் செய்தார்கள். அத்தகைய ஆங்கிலப் பெருமக்களுள் குறிப்பாகவும் சிறப்பாகவும் கொள்ளத்தக்கவர்களையும், அவர்கள் செய்த தமிழ்த் தொண்டினையும் அறிந்துகொள்ளுதல் நலம்.

வீரமா முனிவர் தேம்பாவணி என்ற சிறந்த இலக்கியத்தைத் தந்தவர். கால்டுவெல் என்ற பெரியார் மொழிபற்றிய இலக்கணத்தைத் தெளிவுபடக் கூறிப் பிற மொழியாளரும் தமிழின் சிறப்பை உணரச் செய்தவராவார்.

டாக்டர் போப் ஐயர் அவர்கள் திருக்குறள், நாலடியார், திருவாசகம் ஆகிய நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துப் பிற்காலத்தில் பாரதியார் கூறியவாக்குப்படி வள்ளுவனை உலகுக்குக்காட்டினார் என்பது மிகையாகாது. அண்மைக் காலத்து வாழ்ந்த ஹீராஸ் பாதிரியார் திராவிட நாகரிகத்தின் சிறப்பை உணர்ந்து தம் உள்ளத் தெளிவால் கூறிய வாக்கியமே அவர் தமிழ் மக்களிடமும், நாட்டிடமும் காட்டும் பெரும் பற்றைக்காட்டும். தாமை ஸ்பெயின் நாட்டினின்றும் வந்த திராவிடன் எனக்கூறிப் பெருமைகொண்ட நிலையே அவரது அன்புடைமையை விளக்கும்.

இதுகாறும் கூறியவற்றால் ஆங்கிலேயர்கள் தங்கள் காலத்தில் அச்சுப்பொறி கொணர்ந்தும், கல்வி வளர்ச்சிக்குப் பாடுபட்டும் மொழி வளர்ச்சியில் கருத்துக்கொண்டும் ஆங்கில நூல் சிலவற்றைத் தமிழில் ஆக்கியும், தமிழ நூல் சிலவற்றை உலக மொழிகளில் பெயர்த்தும், தமிழர்களின் கலை நாகரிகம் பண்பாடு இலக்கண இலக்கியம் ஆகியவற்றின் உயர்வை உலக மக்கள் உணரச்செய்த செய்கைதான் அவர்கள் தமிழ் நாட்டுக்கும் மொழிக்கும் செய்த பெரும் செயலாகும்.

[மதுரைத் தமிழ்ச்சங்கப் பொன்விழா மலர் 1956]

## கருத்துப் புரட்சி

ஒரு பெண் பல ஆண்களை மணந்துகொள்ளும் வழக்கம் இந்த நாட்டிலே நடைமுறையில் இருந்து வந்தது ஒருகாலத்தில் இன்று அது, அநாகரிகமான ஒழுக்கக்கேடான செய்கையாகக் கருதப்படுகிறது. ஒரு பெண்ணும் ஒரு ஆணும் ஒன்றுபட்டு வாழ்வது உயர்வு என்று எண்ணப்படுகிறது இந்தக் காலத்தில். காலை வெட்டி, கையை வெட்டி, காதை அறுத்து உடலுறுப்பை குறைப்படுத்துவது நீதி என்று கருதப்பட்டது ஒரு காலத்தில். இன்று அது அநாகரிகமானது என்று தடுக்கப்பட்டுவிட்டது. ஆனதால் காலத்திற்கேற்பப் பொருளாதார நிலைமாற நம்மில் கருத்துப் புரட்சி வேண்டும்.

—ஆச்சாரிய விநோபா பாவே

# கைவளை கழற்றிய காதலன்

[இரா. நெடுஞ்செழியன்]

கொக்கின் மூக்குப் போன்ற ஆம்பல் பூக்கள் நிறைந்து காணப்படும் நீர் நிலைகளையுடைய வளப்பம் பொருந்திய ஊர்தான் அத்தலைவனுடையது. அவன், அழகுக்கே பேர்போன தன் அன்பு மனையாளை விட்டுப் பிரிந்து, பரத்தை இன்பம் நுகருதற் பொருட்டு பரத்தையர் சேரிப்பக்கம் செல்கிறான். அங்கும் பல கலைகளிலே வல்ல, வனப்பும் வளமும் பெற்ற, கண்டாரைக் கவரும் கவர்ச்சிமிக்க பரத்தை ஒருத்தியை அடைகிறான். வீட்டையும், பண்புமிக்கமனைவியையும், ஊரையும் மறந்து அவளிடத்திலே இடையறாத காமவின்பம் துய்த்துக் கொண்டிருக்கிறான்.

தலைவன் எங்கே சென்றான் என்பது தலைவிக்குத் தெரியவில்லை. பொருள்தேடும் பொருட்டு அல்லது போர்ப் படைக்குத் தலைமை தாங்கும் பொருட்டு அவன் வெளி நாட்டிற்குச் சென்றிருப்பானோ, அல்லது கள்வர்களால், விலங்குகளால் அவனுடைய உயிருக்கு ஏதேனும் ஏதம் ஏற்பட்டதோ என்று பலவாறாக எண்ணி எண்ணி ஏங்கித் தவிக்கிறாள் தலைவி. தலைவன் சென்றுள்ள இடத்தை அல்லது அவன் போன வழியைக் கண்டறியும் பொருட்டுத் தோழி எவ்வளவோ அலைந்து திரிந்து சுற்றித் தேடிப்பார்க்கிறாள். தலைவன் அறிவும் ஆற்றலும் மிக்கவனாதலால் அவன் ஏதோ அவசரப் பணியின் காரணமாக வேற்றூர் சென்றிருக்கக்கூடும், அவனுக்கு ஏதம் ஒன்றும் ஏற்படாது, அவன் எப்படியும் விரைவில் வந்து விடுவான் என்று பலவாறான ஆறுதல் மொழிகளைக் கூறித் தோழி தலைவியை ஒருவாறாகத் தேற்றிக்கொண்டு வருகிறாள்.

தலைவன் பரத்தை வீட்டைவிட்டு நீங்காமல், அங்கேயே யிருந்துகொண்டு, அவளுக்கு வேண்டிய ஆடை அணிவகைகளை அவள் விரும்பியவாறு வாங்கிக் கொடுத்துக் கொண்டேயிருக்கிறான். பரத்தையானவள் அவனிடத்தில் எவ்வளவு பெரும் பொருள் கறக்க முடியுமோ அவ்வளவையும் கறந்து கொண்டுவிடுவது என்று திட்டம் போட்டு வேலை செய்துகொண்டு வருகிறாள். அவளுக்குத் தலைவன் வாங்கிக் கொடுத்துள்ள அணிகளிலே கைவளையல் மிகச் சிறந்ததொன்று. அது ஒளியுமிழும் வெள்ளிய வயிரக்கற்கள் பதிக்கப்பெற்றுப் பொன்னாலான, சிறந்த வேலைப்பாடுகள் அமைந்ததாகும்.

ஒரு நாள் தலைவனுக்கும் பரத்தைக்கும் ஏதோ ஊடல் ஏற்படுகிறது. தான் எவ்வளவோ பொருள்களைக்கொட்டிக் கொடுத்தும், ஆடை அணிகளை வழங்கியும், மாறா அன்பு காட்டிவந்தும்கூடப், பரத்தை, தன்னை மதிக்காமல் நடந்து கொள்கிறாளே என்று சினங்கொண்ட தலைவன், அவளுக்குத் தன்னால் போடப்பட்ட அணிகலன்களைப் பிடுங்கிவிட வேண்டும் என்று எண்ணுகிறான். தலைவன் சினத்தோடு அவளைப் பற்றிப் பிடிக்கச் சீறி எழுகிறான். தலைவன் தன்னை அடிக்க வருகிறானோ என்று அஞ்சிய பரத்தை ஓடுகிறாள். அவள் வீட்டின் கூடத்திலும், தாழ்வாரத்திலும் சுற்றிச்சுற்றி ஓடத், தலைவன் அவளைப் பின்தொடர்ந்து பிடிக்க முயலுகிறான். இறுதியில் அவளது நறுமண நெய் பூசப்பட்ட கூந்தலை எட்டிப்பிடித்து இழுத்து, அவள் கையிலே அணிந்திருந்த வேலைப்பாடுகள் அமைந்த வளையல்களைக் கழற்ற முயலுகிறான்.

"நான் வளையலைத் தரமாட்டேன்! விடுங்கள், விடுங்கள்!" என்று பரத்தை கத்துகிறாள்.

தலைவன், "நான் செய்துபோட்ட வளையல்கள் தானே! அவற்றை நான் கழற்றிக் கொள்ளவே செய்வேன்!" என்று கூறி அவளை அழுத்திப் பிடித்துக்கொண்டு வளையல்களைக் கழற்ற முயலுகிறான்.

பரத்தை எவ்வளவோ திமிறிக்கொண்டு அவனது பிடியிலிருந்து நழுவிச்செல்ல முற்படுகிறாள். அவளால் முடியவில்லை.

அவள் சினம் முகத்திலே கொப்பளிக்க "என்னை விடுங்கள்! விடுங்கள்!" என்று அலறுகிறாள்.



தலைவன் "உன்னை விடமுடியாது! வளையல்களைக் கழற்றிக் கொண்டுதான் விடுவேன்!" என்று கூறுகிறான்.

பரத்தை "நீங்கள் என்னை விடுகிறீர்களா இல்லையா? நான் இங்கு நடந்ததையெல்லாம் இப்பொழுதே உங்கள் மனைவியிடத்தில் சென்று விவரமாகச் சொல்லட்டுமா?" என்று அதட்டிக்கேட்கிறாள்.

அந்தச் சொற்களைக் கேட்டவுடனே தலைவன் நடுநடுங்கிப் போய், அவளை அப்படியே விட்டு விடுகிறான். அவனது கைகளும் கால்களும் நடுக்கம் எடுத்துக் கொள்கின்றன. மனைவியைப் பற்றிய எண்ணமும், அவள், தன்னைச்சினந்து கொள்வாளே என்ற அச்சமும் அப்பொழுது தான் அவனுக்கு ஏற்படுகின்றன.

உடனே அவன் பரத்தையை நோக்கி, "அன்பே! நீ என் கட்டிக்கரும்பு அல்லவா? கண்மணி! நான் உன்னிடம் இனி ஒருபொருளையும் திருப்பிக் கேட்க மாட்டேன்! நீ சொல்லுகிறபடியெல்லாம் நடக்கிறேன்! நீ விரும்புவனவற்றையெல்லாம் செய்கிறேன்! என்னைப் பற்றிமட்டும் என்மனைவியிடத்தில் ஏதும்சொல்லிவிடாதே! நான் இனி எப்பொழுதும் உன்னோடேயிருந்து, உன் விருப்பப்படி நடந்து கொள்கிறேன்! என்னை மன்னித்து ஏற்றுக் கொள்வாயா?" என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறான்.

பரத்தை தலைவனுடைய நிலைக்கு மிகவும் இரங்கி, ஏளனச்சிரிப்பு சிரித்துக்கொண்டு, அவனிடம் மீண்டும் அன்புகாட்டும் அறிகுறியாக அவனை அணைத்துக்கொள்கிறாள். தலைவனும் பரத்தை மனம் மாறிவிட்டாள் என்பதை அறிந்து மகிழ்ந்து அவளோடு தொடர்ந்து இருந்து வாழ்ந்து வருகிறான்.

தலைவனைக் காணாது, தலைவி ஆற்றொணாத் துயரத்தில் அமிழ்ந்து, துன்பத்தோடும், வருத்தத்தோடும் உடல் நலமெலாம் இழந்து காணப்படுகிறாள். நாட்கள் செல்லச் செல்ல தோழி எவ்வளவோ ஆறுதல் கூறினாலும், அதனால் தேறுவதற்கு வழிகாணாது, எப்பொழுதும் படுத்த படுக்கையாகக் கிடந்து உழன்று கொண்டிருக்கிறாள்.

தலைவனுக்கும் பரத்தைக்கும் பிறிதொரு நாள் மீண்டும் ஊடல் ஏற்படுகிறது. பரத்தை தலைவனை ஏறிட்டும் பார்க்காமல் அறைக் கதவைத் தாழிட்டுக்கொண்டு, படுக்கையில் போய்ப்படுத்துக்கொள்கிறாள். தலைவன் தன் மானம், மதிப்பு, பொருள் எல்லாம் போய்விட்டனவே என்று எண்ணி, ஏங்கிக், கலங்கி உட்கார்ந்திருக்கிறான். சிறிது நாழிகைகழித்து அவ்விடம் விட்டு அகன்று போய்விடுவது நல்லது என்ற முடிவுக்கு வந்து, தன் வீட்டை நோக்கிச் செல்கிறான்.

தலைவி என்ன சொல்லுவாளோ, எப்படியெல்லாம் ஏசுவாளோ என்ற அச்சத்துடன் மெல்ல வீட்டினுள் நுழைகிறான். தலைவனைக் கண்டதும் தோழி, "நமது தலைவர் வந்துவிட்டார்! ஓடிவா! ஓடிவா!" என்று தலைவியைக் கூவி அழைக்கிறாள். தலைவி வாரிச்சுருட்டி எழுந்துவந்து அகமகிழ்ச்சியோடு அன்புக் கண்ணீர் சொரிய, தலைவனை அப்படியே கட்டி அணைத்துக்கொள்கிறாள். தலைவனும் பெருமூச்சுவிட்டுக் கண்ணீர் சிந்தியவண்ணம் அவளது கூந்தலைத் தடவிக் கொடுத்து அவளை அணைத்துக்கொண்டு நிற்கிறான்.

"இவ்வளவு நாட்களும் எங்கே போயிருந்தீர்கள்!" என்று தோழி தலைவனை வினவுகிறாள்.

பொருள் தேடி வருவதற்காக வெளியூர் சென்றிருந்தேன். பொருள்தேடும் முயற்சியில் கைப்பொருள் முழுவதும் செலவழித்துவிட்டேன். வருவாய் ஏதும் வந்தபாடில்லை. எவ்வளவோ பாடுபட்டு இழந்த பொருளை மீட்கப் பெரு முயற்சிகள் எடுத்தேன். ஒன்றாவது பலன் கொடுக்கவில்லை. வேறு வழியின்றி இப்பொழுது வெறுங்கையோடு திரும்பியிருக்கிறேன். நான்பட்ட துன்பம் அம்மம்ம! சொல்லித் தீராது!" என்று தலைவன் பொய்க் கூற்றை இரங்கத்தக்க நிலையில் கூறுகிறான். அதுகேட்டுத் தலைவியும், தோழியும் மிகவும் வருத்தப்படுகிறார்கள்.

"பொருள் போனால் போகிறது, நீங்கள் மட்டுமாவது வந்து சேர்ந்தீர்களே, அதுவே போதுமானது" என்று தலைவி கூறுகிறாள்.

"போனபொழுது எங்களிடத்தில் ஒரு சொல் சொல்லிவிட்டுப் போகக் கூடாதா?" என்று தோழி கேட்கிறாள்.

"சொல்லிக்கொண்டுபோனால் தலைவி வருந்துவாளே என்று கருதி, விரைவில் வந்துவிடலாம் என்ற எண்ணத்துடன் சென்றேன், பல் வேறு இடையூறுகள் என்னைத் தடுத்து நிறுத்திவிட்டன!" என்று தலைவன் கூறுகிறான்.

தலைவனும் தலைவியும் வழக்கம்போல் இல்லற வாழ்வை இனிது நடத்தத் தொடங்குகிறார்கள்.

தலைவன், தன்னைவிட்டுப் பிரிந்து இல்லக் கிழத்தியிடம் சென்றுவிட்டான் என்பதைக்

கேள்வியுற்ற பரத்தை ஆழ்ந்த வருத்தமும், அடங்காத சினமும் கொள்கிருர்கள். தலைவன், தன்னிடம் கொண்டிருந்த தொடர்பைப் பற்றியெல்லாம் தலைவி அறியும்படி செய்துவிட்டால், பிறகு தலைவி தலைவனை வெறுத்து ஒதுக்கிவிடுவாள்; தலைவி வெறுத்து ஒதுக்கிவிட்டால், மீண்டும் தலைவன் தன்னிடமே வந்து சேருவான் என்று பரத்தை திட்டம் போடுகிருள்.

ஒருநாள் பரத்தை தன்தோழியாகிய விறலி ஒருத்தியை அழைத்துக்கொண்டு தலைவனின் தெருப்பக்கம் செல்கிருள். அங்கோர் வீட்டின் தாழ்வாரத்தில் தலைவியின் தோழியும், பிறமகளிரும் உரையாடிக்கொண்டு உட்கார்ந்திருக்கிருர்கள். தலைவியின் தோழி அங்கு இருக்கிருள் என்பதை அறிந்த பரத்தையும், விறலியும் மெல்ல சென்று அந்த மகளிர் கூட்டத்தோடு சேர்ந்து உட்கார்ந்துகொண்டு, உரையாடலில் பொதுப்படையாகக் கலந்து கொள்கிருர்கள்.

சிறிது நேரங்கழித்துப் பரத்தை தன் விறலியைப்பார்த்துத், தலைவனுடைய வீட்டைச் சுட்டிக் காட்டி "அதோ, அந்த வீட்டில் இருக்கிருரே தலைவர், அவரை உனக்குத் தெரியுமா?" என்று வினவுகிருள்.

தலைவனைப் பற்றி ஏதோ பேச்சு பரத்தை விறலிக்கு இடையே ஏற்படுவது அறிந்து, அவர்களுடைய உரையாடலை உற்றுக் கவனிக்கத் தொடங்குகிருள் தோழி.

"அவரைநான் பார்த்திருக்கிறேன்! அவருக்கு என்ன?" என்கிருள் விறலி.

"இப்பொழுது அவருக்கு ஒன்றுமில்லை! சென்றபல நாட்களாக அவர் என்னுடைய வீட்டில் என்னேடுதான் இருந்துவந்தார்!" என்று கூறுகிருள். அதுகேட்ட தோழிக்குத் தூக்கிவாறிப் போடுகிறது. பரத்தை மேலும் என்ன சொல்லுகிருள் என்று உற்றுக் கவனிக்கிருள்.

"இப்பொழுது ஏன் அவர் உன்னைவிட்டுப் பிரிந்து வந்து விட்டார்?" என்று கேட்கிருள் விறலி.

"எனக்கும் அவருக்கும் சிறு ஊடல் ஒன்று ஏற்பட்டது. அதன் காரணமாக, என்னிடம் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிவந்துவிட்டார்!" என்கிருள் பரத்தை.

"உன்னேடு அவர் எப்பொழுதும் சண்டை போட்டுக் கொண்டுதான் இருந்தாரா?" என்று கேட்கிருள் விறலி.

"சில சமயங்களிலே எங்களுக்கிடையே ஊடல் ஏற்படும். பிறகு தணிந்து விடும். பிறகு அவர் எப்பொழுதும் போல் அன்போடு இருப்பார். வேடிக்கை ஒன்றைக் கேளேன்! ஒரு சமயம் எனக்கும் அவருக்கும் ஊடல் ஏற்பட்டது. என் மீது சினங்கொண்டு அவர் செய்து போட்ட அணிகலன்களையெல்லாம் கழற்ற முயன்ருர். நான் அவருக்கு அகப்படாமல் வீட்டிற்குள் தாழ்வாரத்தையும் கூடத்தையும் சுற்றிச்சுற்றி ஓடினேன். அவர் என்னைப் பிடிக்கச் சுற்றி ஓடிவந்து, எனது கூந்தலைப் பிடித்து இழுத்து நான் போட்டுக்கொண்டிருந்த வேலைப்பாடுகள் அமைந்த வளையல்களைக் கழற்றமுயன்ருர். 'விடுங்கள்! விடுங்கள்!' என்று நான் எவ்வளவோ சொல்லிப்பார்த்தேன், கதறி அழுதுபார்த்தேன், அவர் கேட்பதாயில்லை. இறுதியில், இங்கு நடந்ததையெல்லாம் நான் உம் மனைவியிடம் சென்று சொல்லிவிடுவேன். என்று சொன்னவுடன், அவர் என்னைவிட்டு விலகிநின்று நடுநடுங்கிப் போய் அப்படியே நின்று விட்டார். அவரது நடுக்கம் எனக்கு மிகுந்த நகைப்பைத்தான் உண்டாக்கிற்று. அவரது நடுக்கத்தைப் பார்க்கும்போது எனக்கு வேறென்றின் நினைப்பு வந்தது!" என்று பரத்தை கூறுகிருள்.

அதுகேட்ட விறலி 'எதன் நினைவு வந்தது?' என்று கேட்கிருள்.

"நமது நாட்டு மன்னன் மலையமான் இருக்கிருனே, அவனது நாளோலக்க (தர்பார்) மண்டபத்தின் காட்சி ஒன்று என் நினைவுக்கு வந்தது. மலையமான் பகைவரது பசுமாட்டுக் கூட்டங்களையெல்லாம் வென்று கொண்டுவந்து, நாளோலக்க மண்டபத்தில் வீற்றிருக்கும் போது, அவனிடம் மாடுகளையும், தேர்களையும், பொருளையும் பரிசில்களாக வாங்க, புலவரும் பாணரும், கூத்தரும் வந்தனர். கூத்தர் மலையமானை மகிழ்விக்கவேண்டி மத்தளத்தை அதிரச்செய்து இசையோடு கூடிய கூத்தை நடத்தினர். அந்த மத்தளத்தின் மார்ச்சனை வைத்த பக்கம் எப்படி அதிர்ந்ததோ, அப்படி நடுங்கிற்று தலைவனுடைய கைகால்கள். அதனைக் காணும்போது எனக்கு நகைப்பு உண்டாயிற்று. அதை இப்பொழுது நினைத்துக் கொண்டால்கூட எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது!" என்று சொல்லிவிட்டுப் பரத்தை விழுந்து விழுந்து சிரிக்கிருள்.

இந்தச் செய்திகளைக் கேட்டுக்கொண்டிருக்கும் தோழிக்கு ஒரே திகைப்பு உண்டாகிறது. இவற்றையெல்லாம் தலைவியிடம் போய்த் தெரிவிக்கலாம் என்ற எண்ணத்துடன்,



தோழி தலைவியின் வீட்டைநோக்கிச் செல்கிருள்.

தலைவனும் தலைவியும் ஊஞ்சலில் உட்கார்ந்து ஆடிக்கொண்டிருக்கிருர்கள். தோழி பரத்தையைப் பற்றியும், அவள் சொன்ன செய்திகளைப் பற்றியும் ஒன்றுவிடாமல் அப்படியே கூறுகிருள்.

அதுகேட்ட தலைவி கண்களில் நீர் வழிய சோர்ந்து ஊஞ்சலின் சங்கிலியைப் பிடித்துக்கொண்டு அதன்மேல் சாய்ந்துவிடுகிருள்! தலைவன் வெட்கத்தால் தலைகுனிந்தவாறு அப்படியே அசைவற்று உட்கார்ந்து விடுகிருன்!

* * *

இது நற்றிணை - 100 ஆம் செய்யுளின் உட்கருத்தைத் தழுவி எழுதப்பட்ட காதற்காட்சியாகும். இந்த நற்றிணைச் செய்யுள் 'பரத்தை தலைவிக்குப் பாங்காயினர் கேட்ப விறலிக்கு உடம்படச் சொல்லியது' என்னும் பிரிவின் பாற்பட்ட மருதத் திணையைச் சார்ந்ததாகும். இதனை இயற்றியவர் பரணர் என்னும் சங்க காலப் பெரும்புலவராவார். கபிலர் இவருக்குச் சிறந்த நண்பர். இவரை ஔவையார் மிகச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பல்வேறு அரசர்களையும், வள்ளல்களையும், அவர்கள் வாழ்ந்த ஊர்களின் வளங்களின் சிறப்பையும் புகழ்ந்து பாடியுள்ளார். இவருடைய பாடல்களிலெல்லாம் அக்காலத்திய வரலாற்றுக் குறிப்புகள் காணப்படுகின்றன. இவர் பாடிய பாடல்களாக நற்றிணை, குறுந்தொகை பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு ஆகிய நூல்களில் எண்பத்தோரு பாடல்கள் காணப்படுகின்றன.

உள்ளுதொறும் நகுவேன் தோழி வள்ளுகிர்
மாரிக் கொக்கின் கூரலகு அன்ன
குண்டுநீ ராம்பல் தண்துறை ஊரன்
தேங்கமழ் ஐம்பால் பற்றி என்வயின்
வால்கோல் எல்வளை வௌவிய பூசல்
சினவிய முகத்துச் சினவாது சென்றுநின்
மனையோட்கு உரைப்பல் என்றலின் முனையூர்ப்
பல்ஆ நெடுநிறை வில்லின் ஒய்யும்
தேர்வண் மலையன் முந்தைப் பேரிசைப்
புலம்பிரி வயிரியர் நலம்புரி முழவின்
மண்ணார் கண்ணின் அதிரும்
நன்னர் ஆளன் நடுங்களுர் நிலையே.

[நற்றிணை - 100]

[பொழிப்புரை: தோழீ! பெரிய நகங்களையுடைய கார்காலத்து நடமாடும் கொக்கினது கூரிய மூக்குப்போன்ற ஆழ்ந்த நீரில் முளைத்த ஆம்பற்பூவையுடைய தண்ணிய துறையையுடைய ஊரன், நெய்ம்மணம் வீசுகின்ற என் கூந்தலைப் பற்றி இழுத்துவைத்து என்கையிலுள்ள வெள்ளிய வேலைப்பாடுகள் அமைந்த ஒளியையுடைய வளையைக் கழற்ற, அதனால் ஏற்பட்ட பூசலாலே சினங்கொண்ட முகத்தோடு அவனை நோக்கி 'இனியான் இங்ஙனம் சினவாது சென்று உன்னுடைய மனைவியிடத்து இங்கு நிகழ்ந்ததையெல்லாம் கூறுவேன்' என்றவுடன், ஊர்முனையிலுள்ள பல நெடிய பசுவின் கூட்டங்களை வில் போரால் வென்று செலுத்திக்கொண்டு, வருகின்ற இரவலர்க்குத் தேர் கொடுக்குங் கைவண்மையையுடைய மலையமான் திருவோலக்கத்தின் முன்பு வேற்று நாட்டிலிருந்து

வந்த பெரிய புகழையுடைய கூத்தர் நன்மையை விரும்பி முழக்குகின்ற மத்தளத்தின் மார்ச்சினை வைத்த பக்கம் அதிர்வதுபோலும் அதிர்ச்சியோடு நன்மையை மேற்கொள்ளும் அவன்தான் நடுங்கிய வருத்தத்தோடு கூடிய நிலையை நினைக்குந்தோறும் சிரிப்பு தோன்றுதலாலே நான் சிரிக்கவேண்டியிருக்கிறது.

வள்ளுகிர்-கூரிய நகம்; குண்டு-ஆழம்; தேன்-நெய்; ஐம்பால்-கூந்தல்; ஆ-பசு; ஒய்யும்-செலுத்துகின்ற, நடுங்களுர்-நடுக்கம்.]

பரத்தை வீட்டிற்குச் செல்லும் தலைவன் எவ்வளவு படாதபாடு படுகிறான் என்பதும், தன்னுடைய தீய ஒழுக்கம் தலைவிக்குத் தெரியாதபடி அதனைக் காப்பாற்றுவதிலே எவ்வளவு முனைப்பாக இருக்கிறான் என்பதும் இச்செய்யுளில் நயம்படச்சிறப்பாக விளக்கப்படுகின்றன.

ஆம்பற்பூவிற்குக் கொக்கின் அலகையும், தலைவனின் நடுக்கத்திற்கு மத்தளத்தின் அதிர்ச்சியையும் உவமையாகக் கூறியிருப்பது பாராட்டுதற்குரியதாகும்.

கூந்தலுக்கு நறுமணநெய் தடவுதல், வளையலை வேலைப்பாடுகள் உள்ளதாகச் செய்தல், வேற்றுநாட்டவரின் பசுக் கூட்டத்தை மன்னன் ஓட்டிவருதல், அரசன் பரிசிலர்க்குத் தேரைப் பரிசாகக் கொடுத்தல், அரசன் திருவோலக்கமண்டபத்திலிருந்து கூத்து நடைபெறுதலைக் காணுதல் போன்ற பழக்கங்கள் கூறப்பட்டுள்ளன.

தலைவன், தன்னிடத்தில் நடந்துகொண்ட விதத்தைத் தலைவியிடத்தில் கூறினால், அவன் யாரிடத்தும் வரைமுறையில்லாது ஒழுகுபவன் என்று தலைவி வெறுப்புக் கொள்ள வழியேற்படும்; அப்படி ஏற்பட்டால் தலைவன் மீண்டும் தன்னிடத்தில் வந்து சேருவான் என்ற கருத்தில் பரத்தை அந்தச் செய்தியை வெளியிடுகிருள். இது பாராட்டி வியத்தற்குரிய குறிப்பாகும்.

இன்சூரன்ஸ் ஏஜண்டு வேலையை மேற்கொண்டு ஆள்சேர்க்கும் படலத்தில் இறங்கிய ஒருவர் எவ்வளவோ முயற்சித்தும், ஒரு ஆளைக்கூட இன்சூரன்ஸ் திட்டத்தில் ஈடுபடுத்த முடியவில்லை. திடீரென அவருக்கு ஒரு யோசனை தோன்றியது. இன்சூரன்ஸ் திட்டத்தின் பயனை பெண்களிடம் எடுத்துக் கூறினுல் அவர்களது கணவன்மார்களை திட்டத்தில் சேர்த்துவிடலாம் என்று எண்ணினுர்.

அதன்படியே தனக்குத் தெரிந்த ஒரு நண்பனின் மனைவியிடம் சென்று ஆயுள் இன்சூரன்சைப்பற்றி விரிவாக விளக்கி தனது நண்பனை ஒரு பாலிசி எடுத்துக்கொள்ளச் செய்யும்படி வேண்டிக்கொண்டார். அதற்கு அந்தப் பெண்ணும் சம்மதித்தாள். இன்சூரன்ஸ் ஏஜண்டு விடைபெற்றுக் கிளம்பும்போது அப்பெண் ஒரு விளக்கம் கேட்டாள்.

"ஆமாம்! இன்சூரன்ஸ் பாலிசி எடுத்த மறுநாளே எனது கணவர் இறக்க வேண்டி நேரிட்டால் திட்டத்தின்மூலம் எனக்கு என்ன கிடைக்கும்?"

"அது ஜூரர்களின் முன்னிலையில் வைக்கப்படும் சாட்சியங்களைப் பொறுத்தே இருக்கிறது!" என்று கூறிவிட்டு நகர்ந்தார் அந்த இன்சூரன்ஸ் ஏஜண்டு.



# செய்தித்தாள்

[செல்வன்]

காலை மணி ஏழரை. பிராட்வே முனையில் சந்தடி குறைந்திருந்தது. 'டெய்லி நியூஸ்மார்ட்' அப்பொழுதுதான் திறந்துகொண்டிருந்தான். அநேகமாகக் காலையில் அங்கு வருபவர்கள் 'நியூஸ் மார்ட்'டில், ஒன்றரையணு கொடுத்து 'பந்து' பத்திரிக்கை வாங்காமல் போவதில்லை. அந்த வட்டாரத்தில்மட்டுமல்ல நாடெங்கிலும் 'பந்து' பத்திரிக்கைக்கு அவ்வளவு மதிப்பு! பெயருக்கு ஏற்றப்போல தன் மக்களுக்கு மட்டுமின்றிப் பிறருக்கும் சேவைசெய்வதாகப் பெருமைப்பட்டுக்கொண்டிருந்தது 'பந்து'. சிறுவர்க்கான சிறுபகுதிகளிலிருந்து, அழகுக் குறிப்புகள், ஆடைகள் தைப்பது எப்படி என்பவைகளோடு அன்ருட வெளிநாட்டு அரசியல் விவகாரங்கள் பற்றி 'சுடச்சுட' தலையங்கம் எழுதித்தள்ளியும் சேவை செய்து கொண்டிருந்தது.

அன்றைய பத்திரிகையின் ஒருபக்கம் 'மாண்டிசரியும்' முறைப்படிப்பைத் தாக்கி அதே சமயம், குருகுல'க் கல்வியை ஆதரித்து ஆணித்தரமான தலையங்கமும், மற்றொரு பக்கத்தில் தொழிற்சங்கத் தலைவர் ஒருவரை அவர் நடத்த இருக்கும் வேலை நிறுத்தத்தைக் கண்டித்தும், அவரை எச்சரித்தும், வேலை நிறுத்தத்தால் நாட்டின் நலம் பயக்கும் திட்டங்கள் பல பாழாகும் விதத்தையும் பற்றிப் படிப்போர் மனம் மருளும் வகையில் ஒரு கட்டுரையும் மூன்ருவது பக்கத்தில் உயர்தர போலீஸ் அதிகாரி அன்றைய 'பொழுதுபோக்கு'ச்சங்கத்தின் ஆருவது ஆண்டுவிழாவில் மக்கள் போலீஸுக்குச் செய்யவேண்டிய உதவியைப்பற்றியும் போலீஸ் நாட்டுக்குச் செய்யும் புனிதச் சேவையைப்பற்றியும் பேசியதைப் புகழ்ந்து எழுதப்பட்டிருந்தது. இந்தச் செய்தித்தாளின் 'வார இதழ்'கள் மலராக வெளிவரும். இவற்றில் "காதல் செய்வது எப்படி?" என்ற மனோதத்துவ வாழ்க்கை விளக்கக் கட்டுரை, கேள்வி-பதிலில் ஒளிமிகுந்த கண்கள், சிவந்த கன்னம், வசிகரமான முகம் இவற்றை எப்படிப் பெறுவது என்பது பற்றி, ரசிகர் ஒருவரின் கேள்விக்குப் பதிலும் இருந்தது. இதுதவிர,

"அன்பு மோகன்!

என்னை மன்னித்துவிடு! நீ செய்ததுசரி. நாளைக் காலை 8.30 மணிக்கு என்னை நீதி மன்றத்திற்கு அருகே சந்தி. மாலையில் நாம் செல்லலாம்.

இப்படிக்கு

முத்து"

என்றுசிறு விளம்பரம் ஒன்றும் வெளியாகி இருந்தது.

காலை எட்டுமணிக்கு 'நியூஸ் மார்ட்' அருகில் ஒரு இளைஞன் வந்தான். இரவில் தூக்கமின்றி கண்விழித்தவன் போல் கண்கள் 'சிவ்' வென்று சிவந்திருந்தன. அமைதியற்று அலைபாயும் கண்களுடன் தன் சட்டைப் பையிலிருந்து ஒன்றரையணுவைத் தடவி எடுத்து 'நியூஸ் மார்ட்'டில் கொடுத்து அன்றைய காலைப் பத்திரிக்கையை வாங்கிப் படித்தான். இரண்டுவாரம் தாடி சேர்ந்து கோரப்புல் போல வளர்ந்திருந்தது. ஒன்பது மணிக்கு அலுவலகம் வேறு செல்லவேண்டும், அதற்குள் மயிரும் உடையும் திருத்தி உணவு உட்கொள்ளவேண்டும்.

'பார்பர்ஷாப்' பிற்குச் சென்றுவிட்டு வீட்டிற்கு விரைந்தான். அலுவலகத்தில் இடைநேரத்தில் படித்துக் கொள்ளலாம் என நினைத்து செய்தித்தாளை மடித்துப் பைக்குள் வைத்தான். தம்புச்செட்டி தெரு முனை திரும்புவதற்குள் அன்று காலையில் தான் வாங்கிப் பையில் வைத்திருந்த செய்தித்தாளும் கைக்குட்டையும், கீழே விழுந்துவிட்டன என்பது தம்புச்செட்டிதெரு முனை திரும்பி சிறிதுதூரம் சென்றபிறகுதான் தெரிந்தது. தேடுவதற்குத் திரும்பிவந்தான். அப்பொழுதுதான் அங்கு வந்த முத்து, அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு, "மோகன்! குறித்தநேரத்தில் நீ இங்கு வருவாயென்று எனக்கு நிச்சயமாகத் தெரியும்" என்ருள். அவள் என்ன சொல்கிருள் யாரைச் சொல்கிருள் என்று அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. முகத்தில் அசடு

வழிய "ஆமாம்" என்று இழுத்தான். இந்தச் சமயத்தில் ஒரு பெருங் காற்றடித்துப் பாதை யோரத்தில் கிடந்த செய்தித்தாளைப் பறக்க விரித்துப் பக்கத்துத் தெருவிற்குள் சுழற்றிய டித்தது. 'குடும்பக்கலை'ப் பகுதியில், கேள்வி பதிலில் ஆசிரியருக்குத் தான் நினைத்துஏங்கும் பெண்ணொருத்தியின் காதலைப் பெறுவது எப் படி என்ற கேள்வியை எழுதிவிட்டு, அதன் பதிலில் தன் எதிர்காலத்தை கற்பனை செய்து கொண்டிருந்த ஒருவன், வேகமாக வந்து கொண்டிருந்தான். பாதையோரத்தில் ஒரு ஆளை ஏற்றிக்கொண்டு குதிரைவண்டி ஒன்று சென்றுகொண்டிருந்தது.சுழன்றடித்தகாற்று பிரித்தசெய்தித்தாளைக் குதிரையின் முகத்தில் அடித்தது. குதிரை மிரண்டு வண்டியைச் சாய்த்துவிட்டது. வண்டிக்குள் இருந்தவன் நான்கு வீடுகள் தாண்டித் தூக்கி எறியப்பட் டான். அந்த வீட்டிலிருந்து தற்செயலாகக் குப்பையை வெளியில் கொட்டவந்த பெண் ஒருத்தி, கீழே மயங்கிக்கிடக்கும் இளைஞனைக் கண்டு, "ஐயோ! நீயா! உனக்கு இந்தக்கதியா? நீ இறந்தால் என் கதி? நானும் சாகவேண்டி யதுதான்" என்று கதறினாள். அக்கம்பக்கத் திலுள்ளவர்கள் அவளை ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டிருந்தனர். வேறுசிலர் கேலி யும் கிண்டலும் தொனிக்கப் பேசினர். அவள் எதையும் சட்டைசெய்யாது அவனைத் தூக் கித் தன் மடியில் வைத்துக்கொண்டு புலம்ப லானாள்.

அலுவலகம் நோக்கிச் சென்றுகொண் டிருந்த ஹெட்கான்ஸ்டபிள் வீராசாமி கடமையுணர்ச்சி மிக்கவன். 'பொதுஜன அமை திக்குப் பங்கம் விளைவிக்கும்' தீயசக்தியான அந்தத்தினத்தாளை துரத்தி 'கிருஷ்ண கபே' வாயிலருகில் பிடித்தான். சிதைந்திருந்த அதன் பகுதிகளைச் சரிப்படுத்தி மடிக்கும் பொழுது மூன்றாவது பக்கத்திலிருந்து போலீஸ்காரர்களுக்குப் பத்திரிக்கைகள் செய் யும் உதவி' என்ற தடித்த எழுத்து கண்ணில் பட்டது. அதை உரக்கப் படித்தான். 'பொழுதுபோக்குச் சங்கத்தின் ஆறுவது ஆண்டுவிழாச் சொற்பொழிவில் கலந்து கொண்ட பிரபல 'பந்து' பத்திரிக்கை உதவி ஆசிரியர் உமாமகேசுவரத்தின் சிறந்த சொற் பொழிவின்பகுதி அங்கேவெளியாகியிருந்தது. 'கிருஷ்ண கபே' கல்லாப்பெட்டியில் உட்கார்ந் திருந்த உடுப்பி நரசிம்மராவ், கடையருகில் காலை நேரத்தில் நின்று கொண்டிருக்கும் ஹெட்கான்ஸ்டபிளுக்கு ஒரு சல்யூட் அடித்து "வாங்க சார்! டேய், பிச்சுமணி சாருக்கு ஸ்ட்ராங்கா ஒருகப் காபி கொண்டா" என்று வரவேற்று உபசரித்தார். காப்பியைக் குடித்ததும் கடமை நிறைவேற்றக் காற்றாய்ப் பறந்தார் ஹெட்கான்ஸ்டபிள் வீராசாமி. பறக்கும் வேகத்தில் பத்திரிக்கையை மடித்து எதிரில் வந்து கொண்டிருந்த சிறுவன் பால னின் கையில் திணித்து விட்டுச் சென்றார். பாலன் பத்திரிக்கையை வீட்டிற்கு எடுத்துச் சென்றான். அவன் அக்காள் அபிராமி. ரத்தம் குன்றியவள் போல் வெளுத்திருந்தாள். கண் கள் சோர்ந்திருந்தன. எவற்றிலும் அதிருப் தியை வெளிப்படுத்தும் விழிகளுடன் இருந் தாள். "அழகுபடுத்திக் கொள்வது எப்படி?" என்ற கேள்வியை 'அழகுக்கலை' பகுதியில் கேட்டிருந்தாள் மூன்று வாரங்கட்கு முன்பு. இரண்டுவாரமாக பதில் வராததைக் கண்டு ஏமாற்றமும், விரக்தியும் அடைந்திருந்தாள். பாலன் வீட்டினுள் வந்த சமயம் கடைத்தெரு விற்குச் சென்று பினைல் வேலைகளுக்குத் தேவையான நூல்வாங்கிவரக் கடைக்குக்கிளம் பிக்கொண்டிருந்தாள். வெறுங்கையுடன்வெளி யே செல்வதற்குப்பதில் கையில் ஏதாவது எடுத்துச்சென்றால் என்ன என்ற நினைப்புடன் எதையோ தேடிக்கொண்டிருந்த அபிராமியின் கண்களில் பாலன் கொண்டுவந்த பத்திரிக்கை தென்பட்டது. வாங்கிப்பிரித்தாள். அன்றைய தினப்பத்திரிக்கை என உறுதி செய்தபின், அதில் 'அழகுக்கலை, பகுதியை மட்டும் மடித்துக் கையில் வைத்துக்கொண்டு வெளி யே வந்தாள். வாயிற்படியில் பக்கத்து வீட்டு மங்களத்தைச் சந்தித்து சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தாள். கடைக்குச் செல்பவள் கையில் பத்திரிக்கை வைத்துக் கொண்டிருப் பதைப் பார்த்துப் பொறாமை கொண்டாள். 'இரண்டு எழுத்துக் கத்துக்கிட்டா இந்தப் பொண்ணுக, என்ன ஸ்டைல் பண்ணுதுக' என்று நினைத்து ஆத்திரம் மேலிட்டவளாய் பேச்சுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்து அபிராமி சென்றதும் தன் முகவாய்க்கட்டை யை ஒரு சிலுப்பு சிலுப்பித் தோளில் இடித்து வக்கணை செய்தாள். தன்னைப்பார்த்து மங்களம் பொறாமைப் படுகிறாள் என்பதில் அபிராமிக்கு ஒரு தனி இன்பம். இந்த இன்பம் மகிழ்ச்சி யைத்தர மகிழ்ச்சிப்பெருக்கில் கர்வங்கொண்ட வளாய் கடைத்தெருவுக்குச் சென்றாள்.

அபிராமியின் தந்தை அருணகிரி தொழி லாளர் தலைவர். அவர் மேடையேறிப் பேசி னால் கனல் கக்கும், அனல் பறக்கும். அவரை யும் அவர் நடத்தவிருக்கும் வேலைநிறுத்தத் தையும் தாக்கித்தான் அன்றைய பத்திரிகை யில் ஆசிரியர் காரசாரமாகத் தாக்கி வெளுத் துக்கட்டியிருந்தார். அபிராமி விட்டுச்சென்ற



தாட்களை எடுத்துப் பிரித்துப் பார்த்தார் அரு ணகிரி. அவரைப்பற்றித் தாக்கி எழுதியிருந்த தலையங்கம் அவர் கண்ணில் படவில்லை, அதற்குப்பதிலாக சீமான், ஆண்டி, பெரியவர், சிறுவர்கள் இவர்களையெல்லாம் ஒன்றாகத் திணற அடிக்கும் குறுக்கெழுத்துப் போட்டி தலைவர் கவனத்தைக் கவர்ந்தது. வேலைநிறுத் தத்தின் காரணத்தைப் பற்றியும் தொழிலா ளர்களின் குறைபற்றியும் விவாதிக்க அன்று காலை, ஆலை அதிபர்கள் அரசாங்கத் தொழில் நல அதிகாரி, தொழிலாளர் தலைவர்கள் இவர் கள் கூடி ஆலோசிக்க ஏற்பாடாகி இருந்தது. அருணகிரி குறுக்கெழுத்துப் போட்டியில் தன்னை மறந்தவராய் கையில் அகராதி, பென் சில் இத்துடன் மேஜையருகில் வீற்றிருந்தார். குறிப்பிட்ட நேரம் வந்தது. ஆனால் அருணகிரி மட்டும் கூட்டத்திற்கு வரவில்லை. ஆலை அதி பர்கள் சார்பில் தீர்ப்புக் கூறப்பட்டு வேலை நிறுத்தத்தால் தொழிலாளர்கள் அதிகம் பாதிக்கப்படுவார்கள் என்றும், மீறிச்செய்தால் தண்டனைக்குள்ளாவார்கள் என்றும் அறிவிக் கப்பட்டது. இதன் விளைவாக வேலைநிறுத்தம் தவிர்க்கப்பட்டது.

மாலையில் பள்ளியில் இருந்து திரும்பிய பாலன் புத்தகத்தில் மறைத்து வைத்திருந்த சிறுவர்க்கான சிறுபகுதிகளைத் தனியாக எடுத்துவைத்தான்? இவற்றிற்குப்பின் பத்தி ரிக்கை நாட்டுமக்களுக்குச் சேவை செய்கிறது என்பதில் யாருக்குச் சந்தேகம் ஏற்படும்?

(ஓ. ஹென்றியின் சிறுகதை யொன்றைத் தழுவியது.)



# புலவன் யார்?



புலவன் என்பவன் மலர்கள் சூழ்ந்த பூஞ்சோலையின் நடுவே, வானத்தை அளாவும் ஒரு மாட உச்சியில் தன்னந் தனியே பாடிக்கொண்டு மகிழ்பவனல்லன். மக்கள் நிறைந்த கூட்டத்திலும், பெருஞ் சாலைகளிலும், போர்க் களங்களிலும் நின்று மக்களுக்குண்டாகும் இன்ப துன்பங்களில் தானும் உழன்று, அவர்களுக் குச் சோர்வு உண்டாகும்போது அவர்களுக்கு உண்மையைக் காட்டி, அவர்க ளுடைய மயக்கத்தை நீக்குபவனே புலவன். அவனுடைய பாட்டெல்லாம் ஓய்ந்து போன மக்களை எழுப்புவனவா யிருக்கவேண்டும்; நம்பிக்கையற்றவர்களுக்கு நம் பிக்கை தரத்தக்கனவா யிருக்கவேண்டும்; தைரியமிழந்தவர்களுக்கு அப்பாடல்கள் தைரிய மூட்டவேண்டும்; தூங்குகிறவர்களை எழுப்பவேண்டும்; சோம்பேறிகளை எழுப்பவேண்டும்; தீய வழிகளில் செல்பவர்களுக்கு நல்வழி காட்டவேண்டும். மக்களுக்குத் துணிவு, மகிழ்ச்சி ஆற்றல் ஆகியவற்றைப் புகட்டுவதே அவன் தொழில்.

—கவியரசி சரோஜினிதேவி.

சிறுகதை

# ஆசைச் செலவு

அருணன்

ஊர் மிக அமைதியாக உறங்கிக்கொண்டிருந்தது. உழைத்து அயர்ந்தோரும், உழைப்பே அறியாதவரும் ஒருசேர உறங்கிக்கொண்டிருந்தனர். எங்கோ ஒரு கோடியில் நாய் குரைக்கும் சத்தம், தங்கள் கோரக்குரலை இசையாகக் கொண்டு இரவைக் கொண்டாடும் பறவைகளின் ஒலி, பசியின் காரணத்தால் அழும்குழந்தைகளின் குரல் ஆகிய இவையே அந்த இரவை ஆட்சிசெய்து கொண்டிருந்தன. இவற்றையெல்லாம் கடந்து ஏதோ ஒருகுரல் எதிரொலித்துக் கொண்டிருந்தது. 'அது சந்திரா சந்திரா' என்று ஒலித்தது. ஒலிவந்த திசையில் ஒரு முதியவர் கையில் ஒரு சூறை விளக்கை (ஹரிக்கேன்லைட்) எடுத்துக்கொண்டு யாரையோ தேடிக்கொண்டுபோவது போலக் கூவிக்கொண்டே போனார். அவர் குரல் ஒவ்வொன்றும் எங்கும் எதிரொலித்தது. அந்த முதியவர் இன்று நேற்றல்ல, கடந்த ஓராண்டாகவே அபபடித்தான் தினமும் இரவு பன்னிரண்டுமணி அடித்ததும் கூவிக்கொண்டு புறப்பட்டுவிடுகிறார். முதலில் அவ்வூரார் அஞ்சினர். பலமுறை தடுத்துப் பார்த்தனர். இறுதியில் பயனெதுமில்லையெனக் கண்டு வாளா இருந்துவிட்டனர். பன்னிரண்டுமணிக்குச் செல்லும் அவர் எப்போது திரும்புவாரென்று யாரும் கண்டதில்லை. காரணம், திரும்பிவரும்போது அவர் கூவிக்கொண்டு வருவதில்லை. ஆக, சென்று அமைதியுற்றுத் திரும்புகிறாரென்பதல்ல பொருள். அவர் வரையில் ஒரு பெரும் ஆறுதல் அங்கே அவருக்குக் கிடைக்கிறது. இத்தகைய ஆறுதலை இரவிலே தேடிச் செல்ல வேண்டியநிலை கடந்த ஓராண்டுக்கு முன்னர் அவருக்கு ஏற்பட்டது. இந் நிலைக்குரிய நியதியைச் சில ஆண்டுகளுக்கு முன்பாகவே எய்திவிட்டார். இப்போது இதுதவிர வேறு சிந்தனையே அவருக்குக் கிடையாது. இரவு வரும்வரை காத்திருக்கவேண்டியது. இரவு மணி பன்னிரண்டானதும் பொறி இயங்குவது போல் புறப்பட்டுவிடுவார். குரலும் கூடவே தொடரும். இத் தனிமனிதனின் இத்தகு செயலில் ஒரு வரலாறு அடங்கியிருந்தது. அதாவது, ஒருநாள்:

காலை. கன்னியர்கள் ஒன்றுகூடிக் குளக்கரை நீராடித்திரும்பும் அமயம். கிராம மாதலால் யாவரும் அறிந்தவர்களாகவும் அறிமுகமானவர்களாகவுமே இருப்பார்கள். எனவே ஒருவருக்கொருவர் விதித்துக்கொள்வதே கட்டுப்பாடு, சட்டம். அதை அவரவர்கள் தத்தம் வகையில் காத்துக் கொள்வார்கள். அத்தகைய தன்னமைப்புச் சட்டத்திற்குட்பட்டதே பருவமங்கையர் நீராடல் முதலியனவும். அந்நேரத்தில் ஆடவர்கள் அந்தப்பக்கங்கூடச் செல்லமாட்டார்கள். அப்படி எவரேனும் அறியாமையாலோ ஆணவத்தின் பேரிலோ சென்றால்கூட, காண்போர் அத்தகையோரைத் தடுத்து, தக்க பதிலோ – பரிகாரமோ தந்து அனுப்பிவிடுவார்சள். இதனை நகரவாசிகளாக இருந்து நாட்டுப்புற வாழ்வை நுகரநேர்ந்தவர்கள் அறிந்திருக்கக் கூடும்: நிற்க,

இம்மாதர் குழாமின் தலைவிபோல்பவள் சந்திரா. அதற்குப்பல காரணங்களுண்டு. அவள் அவ்வூர் மிராசுவின்மகள். நல்ல எழிலி. கொஞ்சம் கற்றவளுங்கூட. 'நகர்வாழும் நங்கையோ' என்றுகூடக் காண்போர் அய்யுறநேரும். அவ்வண்ணமிருப்பாள். அன்று அவள் வரச் சற்றுக் காலந்தாழ்ந்தது. எனவே அவளுடைய தோழியர்கள் கரையேறி வந்துவிட்டனர் அவள் வருவதற்குள். அவளும் எல்லோரையும் வழியனுப்பிவிட்டுத் தனியே குளித்துவிட்டு விரைந்தாள். வருகிற வழியில் ஒரு மண்டபம். அங்கே அய்யோ அம்மா, அப்பா என்ற முனகல் குரல் கேட்டது. உட்சென்று பார்த்தாள் சந்திரா.



நல்ல இளம்வயது. எழிலுங்கூட. ஆனால் எழில்மேனியெல்லாம் எரியிடைப்பட்ட புண் போல எங்கும் ஒரேசிவப்புமயமாயிருந்தது. அவன் நிலையை நொடியில் அறிந்துகொண்ட அவள் விரைந்து வீடடைந்து, முதலுதவி மருந்துகளும் சிறிது உணவும் எடுத்துக்கொண்டு மீண்டாள். வழியில் அவளைச் சந்தித்த பல தோழியருக்கும் தக்கவாறு பதில் கூறிநடந்தாள். வேதனையால் துடித்துக்கொண்டிருக்கும் அவனுக்கு மருந்திட்டுப் பசிக்கு உணவும் கொடுத்தாள் சற்றே களைப்பு நீங்கப்பெற்ற அவன் சிறிதுபேச இயன்றவனானன்.

சந்திரா: யார்நீங்கள்? இங்கு எப்படி வந்தீர்கள். இந்தக் காயங்கள் எவ்வாறு ஏற்பட்டது. (மரியாதையுடன் நீங்கள் தாங்கள் என்று பேசுவது கிராம வாசிகளாகவுள்ளவர்களின் இயல்பு-பண்பு)

அவன்: அது பெரியகதை! அதை இப்போது கேட்காதீர்களம்மா.

சந்: பரவாயில்லை! சொல்லுங்கள். சொல்லுவதில் பாதித்துன்பம் குறையும் என்பார்கள்.

அவன்: நீங்கள் விரும்புவதால் கூறுகிறேன். இந்த நிலை என்னுடனேயே அழிந்து விடட்டும் என்று கருதினேன் அதில் நீங்களும் பங்கு கேட்கிறீர்கள் என்று கூறித் தன் கதையைத் தொடங்கினன்.

"அம்மா! நானொரு அநியாயக்காரன். அண்ணனைக்கொடுமைக்கு உட்படுத்திய கொடியவன். தன் ஆணவத்தால் தறுக்குற்றுத் தகாதன செய்தவன். எனக்கு இந்தக்கொடுமை போதாது, வேதனைகாணது, உதவிதகாது என் அண்ணன் மிகவும் நல்லவர். வேறெவருக்கும் கிடைக்க முடியாத குணக்குன்று, அன்பின் உருவம், அருமையின் பிறப்பிடம், அமைதியின் இருப்பிடம். அத்தகையவரை அநியாயப்பழிக்கு ஆளாக்கிவிட்டேன் இந்தப் பாவி. இந்தஉலகம் ஒவ்வொரு கொடும் பாவியும் நான்தான் என்று கூறினலும் போதாது. கேளுங்களம்மா! என்னைச்சிறுவயதாக அண்ணன் கையிலே ஒப்படைத்துவிட்டுத்தாய்தந்தையர்கள் இவ்வுலக விடுதலை பெற்றுவிட்டனர். அது முதல் அடைகாக்கும் கோழிபோல என்னை அணைத்தும் போர்த்தும், மீன் தன் குஞ்சுகளைக் காப்பதுபோலச் சுற்றியும் சூழ்ந்தும், கண்ணை இமை காப்பதுபோல இமைத்தும் விழித்தும் காத்துவந்தார். என்னை நான் கசடனய் விடக்கூடாதே என்று கல்விபயிற்றுவித்தார். காண்போர் இகழக்கூடாதே என்று கட்டழகு கூட்டுவித்தார். ஏழைஎன்னும் ஏளனம் சேரக்கூடாதே என்று எடுப்பான வாழ்வளித்தார். அந்த ஏந்தலை, எதனுலும் உவமை கூறமுடியாத சொர்க்கத் தங்கத்தை என் அண்ணனை கொல்லாமல் கொன்று, குற்றுயிராய்த் துடிக்கச் செய்துவிட்டேன். கத்திகொண்டு அறிவாள் கொண்டு தாக்கியிருந்தாலும் 'தம்பியின் ஆசை நிறைவேறட்டும்' என்றெண்ணத் தகுந்த வெள்ளை மனம்படைத்தவரை, அமுதுடன் பிறந்த நஞ்சு போன்ற இந்த அழியாப்பாதகன் அணுவணுவாக வதைத்து விட்டேன். கற்றேன் கண்ணற்றேன். வளர்ந்துவிட்டேன். அறிவை வளர்க்க மறந்து விட்டேன். வலிமைபடைத்தேன் மனவளம்படைத்தேனில்லை. அறியாமைக்கும் குருட்டு நம்பிக்கைக்கும் என்னை ஆளாக்கிக்கொண்டுஅவரை அவதிக்கு ஆட்படுத்திவிட்டேன்.

ஏழைகளை வாட்டிப் பணக்காரன் கொழுக்கிறன் என்பது என் கொள்கை. சமுதாய மாறுபாட்டடிப்படையில் பணம் சுழலுவதால் ஏற்படும் ஏற்றத்தாழ்வை எண்ணிப்பாராமல், பணத்தைப்பகிர்ந்தளித்துவிட்டால் பாகுபாடு நீங்கிவிடுமென்ற பகற்கனவு கண்டேன். அப்போதும் பலமுறை அவரிடம் நான் வாதிட்டபோது அவர் "இந்த நாட்டிலிருக்கும் பணத்தை இந்நாட்டுமக்கள் அனைவருக்கும் பகிர்ந்து கொடுத்தால், நபருக்கு 'சிட்டிகைப்பொடி' விலைகூடக்கிடைக்காது" என்ற அறியதத்துவத்தை விளக்கினர். அதெல்லாம் அவர் அலுவல்பார்க்கும் மார்வாடிமீது கொண்ட மோகமும் பக்தியும் கலந்துவரும் கதம்பச் சொற்களெனக் கடைகெட்டவன் ஒதுக்கிவிட்டேன். அத்துடன் நிற்கவில்லை என் அடிமுட்டாள்தனம். அன்று அவர் வசூல்பணம் கொண்டுவந்து வைத்திருந்தார், "அதெல்லாம் ஏழையின் இரத்தந்தானே! பாட்டாளியின் வியர்வைதானே" என்று வேகமாக எடுத்துச்சென்று ஊராரிடம் விகிதாசாரப் படுத்திக் கொடுத்துத்திரும்பி விட்டேன். இந்தத் தீச்செயலைத்தீரச்செயலென்று கொண்டு என் அண்ணன்முன்னின்று ஆரவாரமாகப் பேசினேன், அவர் மெல்லச்சிரித்தார். அவர் செயலைக்கண்டு சிரித்தேன். அடுத்து நான் நிராதவாகப் போகப் போவதை எண்ணி அவர் அழுதார். என்கண்கலங்கியது. அவர் கதறினர். "தம்பி! உனக்கு இனியாரடா துணை. எதையும் எண்ணமல் எதை எதையோ செய்து விட்டாயே! நான் சிறைச்சாலைக்குப் போகப்போகிறேன் நீ திக்கற்றுத்தவிக்கப்

போகிறாயே!" என்றார். இந்த வார்த்தைகள் என்உள்ளத்தில் ஈட்டியாகப் பாய்ந்தன. என் செயலின் தன்மை அப்போதுதான் என்னைத் தடிகொண்டுதாக்கியது. திகைத்தேன். என் அண்ணன் சிறைச்சாலைக்கு அனுப்பப்பட்டார் அதற்கு என் செயல்கள் தான்முதன்மை வகித்தன. மார்வாடியின் பணத்தை மோசடி செய்துவிட்ட தாகக்குற்றச்சாட்டு. அவரோ மறுக்க முடியாத நிலையிலிருந்தார். மோசடி செய்யவில்லை என்றால் பணத்தைக்கொண்டு வந்துதரவேண்டும். பணம் சென்ற வகையைக் கூறினால் தப்பி கம்பி எண்ண நேரிடும். இவ் விதமனப் போராட்டத்தினிடையில் திருட்டுப் பட்டமேற்றுச் சிறைக்குச் சென்றார். என் துக்கம், தனிமை, பிரிவு ஆகியவைகள் ஒரு சேர என்மனக் கிளர்ச்சிறைத் தூண்டி என்செயல்களை மேலும் வேகத்திற்கு இழுத்துச்சென்றது. அதன் விளைவு தண்ட வாளங்களைப் பெயர்க்கவும், பாலத்திற்கு வெடிவைக்கவும் தயாரானேன். என் செயல்கள் கழுகுப் பார்வையுடனிரும் இரகசியப் போலீசாரிடம் சிக்கி விட்டது. அவ்வளவுதான். நான் வெடி மருந்து வைத்து வெடிப்பதைக்கண்டு களிக்கக்காத்திருந்த இடத்தை நோக்கித் துப்பாக்கிக்குண்டுகள் வெடித்தன. உயிர்மீதுள்ள ஆசை அற்றுப்போகாதகாரணத்தால் தப்பி யோடினேன். துரத்தினர். எவ்வளவுதான் முயன்றாலும் அவர்கள் துரத்துதலிருந்து தப்ப முடிய வில்லை. மேடு பள்ளம், முள் கல், மரம் புதர் ஆகியவைகளில் விழுந்தும் எழுந்தும் இறுதியில் இந்தப்பாழ்மண்டபத்தைத் தஞ்சம்புகுந்தேன்"

என்று கூறிமுடிக்கின்ற சமயம் அவள் அவனை இரக்கமாகப்பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தப்பார்வையில் அன்பும் குழைந்திருந்தது. அதுவரை அப்படிப்பட்ட ஒரு இளைஞனுடன் அவள் தனித்திருந்து பேசியது கிடையாது. அதிலும், அவன் வேதனையும் துக்கமும் கலந்த குரலில் தன் வரலாற்றைச் சொல்லும்போது சில இடங்களில் உள்ளம் உருக்கும் வகையில் பேசினான். அவற்றைக் கேட்டபின்னர் அவனை அங்கு விட்டுப்போக அவள் விரும்பவில்லை; அவனுடனே இருக்கவும் அவள் நிலை இடந்தரவில்லை. இவ்வாறு தவிக்கும் வேளையில் நாய் குரைக்கும் குரல் கேட்டது. அவள் தந்தை வருகிறாரென்று பொருள். அப்படியென்றால் அவள் தந்தைசெல்லும்போது துணைக்காக வேட்டை நாய் இரண்டு செல்லும். அதனை இழுத்துப் பிடித்து வீரநடை நடந்து முறுக்கு மீசையும வீங்கியதோளுமாக நடந்து வருவார். நாயின் குரலைக் கேட்ட சந்திரா "அய்யோ! அப்பா வந்துவிட்டார்! நீங்கள் இங்கேயே இருங்கள், நான் அடிக்கடி வந்து கவனித்துக்கொள்கிறேன்" என்று கூறிவிட்டுக் குறுக்குவழியாகச் சென்று, தந்தையின் கண்களுக்குத் தென்படாமல் வீட்டையடைந்தாள். அவள் வீட்டையடையவும் மிராசுதார் வரவும் சரியாகவிருந்தது. மிராசுதார் வருமுன்னரே அவர் வருகைக்காக அந்தப் 'பிர்க்கா சப்இன்ஸ்பெக்டர்' காத்திருந்தார். மிராசுதார் வந்ததும், வரவேற்பதுடன் தான் வந்திருக்கும் காரியத்தையும் விளக்கினார் இன்ஸ்பெக்டர். இவற்றை சமையலறையிலிருந்து கேட்டுக் கொண்டிருக்கும் சந்திராவின் மனம் அலைமோதியது. அதிலும் "அவன் இந்தப்பக்கந்தான் எங்கோ ஒளிந்து கொண்டிருக்கிறான். அவனைப்பிடித்துத் தரும் பொறுப்பு உங்களுடையது. அதுவும் உங்களால்தான் முடியும். இந்த வீரச்செயலுக்கு அடையாளமாக ராவ்பகதூர்பட்டம் காத்திருக்கிறது" என்று கூறுவதைக் கேட்டபோது மிராசுவின் மனம் "ராவ்பஹதூர் சந்திரசேகரன்" என்ற பட்டத்தைக் கனவு கண்டது. சந்திராவின் மனம் "அய்யய்யோ! என் ஆசைக் கோட்டைகள் இடிந்து தரைமட்டமாகிறதே" என்றலறியது. ஏனென்றால் தன் தந்தையைப்பற்றி நன்றாக அறிந்தவள் அவள். அதை ஊராரும் அறிவார்கள் என்பதற்கு அத்தாட்சி சப்இன்ஸ்பெக்டரின் படையெடுப்பும் பகட்டு மொழியும்.

மிராசு சந்திரசேகரர் ஒரு முகஸ்துதிப்பிரியர். பட்டம் பதவிகளுக்குப் பணியும் பண்பும் அவைகள் தன்னைச்சேர எண்ணும் ஆவலும் கொண்டவர். இந்த மனப்பான்மையினால் அவர் செயல்களிலே பாகுபாடு காண இயலாது. முன்கோபம் இயல்பிலேயே கொண்டவர். 'உங்களை அவன் மீறுவதா' என்றொருவர் தூண்டிவிட்டால் போதும். பிறகு எதிரியின் துவட்சி, அல்லது வீட்சி கண்டுதான் திரும்புவார். இத்தகைய மனிதவேங்கையின் மகள் மறைவாக அடுக்களையிலிருக்கும் மருளுமான் விழிமாது. மனதை முதன்முதல் கருணைக்கு இடமாக்கி, வரலாறு கேட்டபின் இரக்கமாக மாற்றியமைத்து, தனிமைகண்டு தயை கொண்டு, நேர்மைகண்டு காதல் கொண்டாள். அவன் அறியாமைக்கு வருந்தினாளென்றாலும், ஆதரவற்ற அவன் தன் ஆதரவாளனுவானென எண்ணி அகமகிழ்ந்தாள். இவைகள் தன் தந்தையின்கோபத்தீக்கு இரையாகப் போகும் மென்மையாயிருப்பதை எண்ணித் துடித்தாள். 'சந்திரா' என்றழைத்த குரலுக்கு 'இதோவந்தேனப்பா!' என்று சென்றாள். 'காப்பி கொண்டுவாம்மா' என்றார். செல்லும்போதே மேசைமீதிருந்த தினப்பத்திரிகையைக் கையிலே தூக்கிச்சென்றாள். அதில் வந்துள்ள செய்தியைப்படித்தறிய அல்ல! தன் உள்ளத்தையும் உயிரையும் ஒருங்கேகவர்ந்தவன் பிடிக்கப்படவேண்டுமென்பதற்காக வெளியிடப்பட்டுள்ள உருவப்படம் அதிலே வெளியாகியிருப்பதால். அரசினர் வெளியிட்டுள்ளனர் அவனையாரென்று அடையாளம் அறிவிக்க; தன்னை அகன்றிருக்கும் வேளையிலும் உருவங்கண்டு மகிழ உதவியாக அவள் அதனை உடன்கொண்டு சென்றாள். கொண்டுசென்று கொண்டாடினாள். அதற்குள் மீண்டும் தந்தையின் அழைப்பொலிகேட்டு காப்பியுடன் வெளியே வந்தாள். தன் மகளின்பெருமையும் குணத்தையும் வெகுவாகப் புகழ்ந்தும் பாராட்டியும் கூறி, வந்தவர்களை அறிமுகப்படுத்திவைத்தார் மிராசு. உள்ளத்தை அடுக்களையில் வைத்து உதட்டை மெல்லத்திறந்து மேலுக்குப் புன்னகைசெய்து அறிமுகம் செய்துகொண்டவர்களை வணங்குவதுபோல நடித்தாள்.

மாலை வந்தது. ஓடோடிச்சென்றாள் ஓய்ந்த மடமாளிகைக்கு. அங்கே அயர்வுற்றுப் படுத்திருந்த அன்புக்குரியவரை எழுப்பி நடைபெற்ற விவகாரங்களையெல்லாம்கூறிக் கவனத்துடனிருக்கும்படி எச்சரித்துவிட்டு, இத்தொல்லையுலகைவிட்டு எண்ணப் பொறியால் இன்ப வெளியில் நடந்தனர். எத்தனையோ கனவுகள் அவர்கள் கருத்தால் தோன்றி உரையாடலில் வளர்ந்து நிகழ்ச்சியில் தவழ்ந்தது. இருவரும் இன்பமே உருவாய் உலவினர் ஊரின் ஒரு கோடியில். மாலை கழிந்து இரவு வந்தெய்தியது. விட்டுப்பிரிகின்றவேளை. வேதனை தாக்கியது. அதுவரை அடிபட்டகாயத்தின் ஆற்றல் மறைந்திருந்து அப்போதுவந்து தாக்கியது. அதுவே பொருளாய் இருவரும் பேசி ஆறுதல் செய்துகொண்டு பிரிந்தனர். அவள் வீட்டிலேபடுத்திருந்தாள். அவள் உள்ளம் அவனுடன் சென்று உறவாடியது. அதேகனவை அவனும் கண்டு களித்தான். மறுநாள் காலையில் இருவரும் ஒருவருக்கொருவர் கனவின் நிகழ்ச்சிகளைக் கூறிப்பூரித்தனர். அங்கிருந்து பிரிந்து வீட்டிற்கு வந்து, தந்தையின் மனோபாவத்தை மாற்றிவிடலாமென்று முயன்றாள். அவர் காப்பி குடித்துவிட்டு உட்கார்ந்திருக்கும் சந்தர்ப்பத்தில் மெதுவாக வந்து;

சந்: அப்பா!

மிராசு: என்னம்மா!

சந்: இன்ஸ்பெக்டர் சொன்னபடி நீங்கள் அவரைப்பிடித்துக் கொடுக்கப்போகிறீர்களாப்பா?

மிரா: ஆமம்மா! அதற்கென்னதடை உனக்குத்தெரியாதம்மா! அதுபோலப் பலர் இருக்கிறார்கள். அவர்கள் தொலைந்தால் பயம் நீங்கி மக்கள் இதமாக வாழமுடியும்.

சந்: அவர் அப்படிப்பட்டவரில்லை! மிகவும் நல்லவர். அவரை அந்தநிலைக்கு ஆளாக்கியது...இல்லை இல்லை ஆளாகிவிட்டாரென்று கூறுவது இந்தச்சமுதாயந்தான்' அது உண்மையல்ல. இந்தச் சமுதாயத்தைத் தான் பிடித்துக்கொடுக்க வேண்டும்.

மிரா: சமுதாயத்தையா? அதற்கு உருவமே கிடையாது! அதையாவது பிடிப்பதாவது?

சந்: அந்த உருவம் தெரியாத சமுதாயந்தானப்பா பல கேடுகளை உருவாக்குகிறது. பலரை உருத்தெரியாமல்மறைத்துவிகிறது. உத்தமர்களை, செத்தாலும் சாகாபுகழ்ச்செல்வர்களை நாட்டின் நல்லவர்களை இல்லாமல் செய்து இன்னமும் வாழுகிறது. அதன் போக்குக்கு நீங்களும் துணை செய்யாதீர்களப்பா! உண்மை யென்னவென்று யோசியுங்கள் அதில் ஒரு நல்லமுடிவுகாணுங்கள் அதன்பிறகு எல்லாம் செய்யுங்கள்

மிரா: சந்திரா! புரிகிறது உன் பேச்சின்பொருள். என்னையும் மறைத்து நீ அவனுடன் பழகியிருக்கிறாய். வேண்டாம் சந்திரா இந்த வீண்செயல். உன் தந்தையின் குணத்தை அறியாதவளல்லநீ. முன்வைத்தகாலைப்பின் வைக்கமாட்டேன். அவன் தீயவன் தீயவன் தான். நீ அவனுக்கு இரக்கங்காட்டுவது, உன் தந்தைக்கு எதிரானவனுக்கு, பல கேடுகளின் துணைவனுக்குப் பரிவும் ஆதரவும் காட்டுவதாகும். ஆகையால் இந்த வினாடி முதலே அவனுக்கு ஆதரவுதரும் எண்ணத்தை மறந்துவிடு. அவன் எங்கிருக்கிறான் சொல். உன் இளகிய மனநிலையை அறிந்து; நீ என்மகளென்பதைத்தெரிந்து; அவனை நான்பிடிக்கமுடியுமென்பதை உணர்ந்து உன்னைத் தன்மயக்கு மொழிகளால் மாற்றியிருக்கிறான். மலையே புரண்டாலும் மனம் மாறுபடாத சந்திரசேகரன் நான் தந்தையின் உள்ளத்தைத் தள்ளிவைத்து நடக்காத மகள் நீ யென்பதை அந்த மடையன் உணரவில்லை. எங்கிருக்கிறானவன். சொல் இப்போதே அவன் இருக்கவேண்டிய இடத்திற்கு அவனை அனுப்பிவைக்கிறேன். சொல் சந்திரா சொல். என் அருமைமகளே

சொல். என் கண்ணல்ல! காட்டிவிடு அந்தக் கயவன் மறைந்திருக்குமிடத்தை. அருமை மகளே உன் தந்தை நான். என் கீர்த்தியும் புகழும் உன்னுடைய சொந்தம். அதைஉண ர்ந்து, அந்த உலுத்தன் ஒளிந்துகொண்டி ருக்கும் இடத்தை எனக்குச் சொல்லிவிடு.

சந்: அதெல்லாமில்லையப்பா! நானவரைக் கண்டதுமில்லை! அவரைப்பற்றி எனக்குத் தெரியவும் தெரியாது. இதுபோன்று கொடி யவன்-கெட்டவன், என்று கூறப்படுபவர் கள் உண்மையிலேயே நல்லவர்களாக இருந் தும் சில இடைமதியால் இன்னலுக்கு ஆளாகி விடுகிறார்கள். எனவே இவரைப் பற்றிய உண்மையையும் விசாரித்தறிந்து கொண்டு செய்யுங்கள். உங்களைப்பயன் படுத்தித் தங்கள் செயலை நிறைவேற்றிக் கொள்பவர்களுக்கு நீங்களும் உடந்தையாக இருந்து, நல்லதென எண்ணி யொருதீமை யைச்செய்து விடாதீர்களென்றுதான் சொன்னேன்.

மிரா—ஓஹோ! அது எனக்குத் தெரியாதா என்ன? உன் தந்தை தவறான செயலுக்குத் தலையசைக்கமாட்டாரென்பதை நம்பு. நான் திகைத்துப்போனேன் உன்பேச்சின் போக் கைக்கண்டு.

சந்—அப்படியெல்லாம் எண்ணிவிடாதீர்கள். நானென்ன நடப்பதை உணரும் வல்லமை யற்றவளா?

மிரா: சரி! இன்றுநான் பக்கத்து ஊருக்குச் சென்று வருகிறேன். கவனமாக இரு. வீட் டில் முனியாண்டி யிருக்கிறான்.

என்று கூறிவிட்டு, முனியாண்டியை அழைத்துத் தன் பயணத்தின் செய்தியைக் கூறிவிட்டுக் காவல் முறையையும் எச்சரித்து விட்டுச் சென்றார்.

முனியாண்டியின் காவலில் மிராசுவின் வீடிருந்தது. முனியாண்டியோ வீராயியின் உள்ளத்தில் அடைபட்டுவிட்டவன். எனவே ஏனைய நாட்களைவிட மிராசுதார் வீட்டிலில் லாத அந்நாள் அவனுக்குத் திருநாளாக இருந்தது. அதிலும் அன்றிரவு ஊரிலே கூத்து. காதலர் இருவரும் கூத்து நிகழ்ச்சி யைக் காணச் சென்று தங்கள் கூற்றை நிகழ்த் திக் கொண்டனர். அவர்கள் சென்றதும் செல்லப்போவதும் சந்திரா அறியவில்லை. தன் சந்தர்ப்பத்தை நழுவவிடாமல் தன் இன்ப நாட்டைநோக்கி நடந்தாள். மற்றெல்லா இரவு களையும் விட அன்றைய இரவிலே அவள் உள்ளம் மகிழ்ச்சிக் கூத்தாடியது. காணாத இன்ப எல்லையை அன்று காண்பதாக எண்ணி விரைந்தாள். அவளாலேயே உடற்புண்களும் ஆறப்பெற்று உள்ளத்தின் புண்ணும் ஆறி வரும் அந்த இளைஞன் தன் காதல் சிலை பூரண நிலவொளியில் நடந்துவரக் கண்டு கண்குளிர்ந்து நின்றான். அண்மையில் வந்துவிட்டாள் அழகுப்பிம்பம். அப்படியே மணமகளாகத் திகழ்ந்தாள். 'சந்திரா' என்ற ழைத்தான். மாற்றமுரைக்க உள்ளத்தில் எழுந்த சொற்களில் எதைவெளியிடுவதென அறியமாட்டாளாய்த் திகைத்து நிற்கின்ற அவளைத் தன் நீள்கரத்தைத் தடைசெய்யா மல் வாரி அணைத்துச் சென்றான். தூரத்து ஆற்றங்கரை விரித்த அழகு திகழ் அணைமீது அன்பின் பிணைப்புருவங்கள் அமர்ந்து சிறிது உரையாடிக் கொண்டிருந்து விட்டு அகன்ற வானத்தின் உடுக்களின் எண்ணங்களை ஆராய்வார்போல் படுத்து ஆழ்ந்த சிந்தனை யுடன் கண் அயர்ந்து விட்டனர். கனவுலகில் கூடினர். இருவர் உள்ளத்தும் எழுந்த எண் ணங்கள் உறவாடின. அங்கே:

சந்திரா! என்றழைத்தான். அவள் உங்களை எப்படி அழைப்பதென்றறியாமல் திகைக் கிறேன்-என்று மறுமொழிதந்தாள். என்பெயர் மாணிக்கம் என்று கூறி அந்தமாணிக்கப் பது மையைப்பார்த்து மயங்கினான்.

சந்: புருஷனின் பெயர் சொல்லி அழைப்பது நாட்டு வழக்கமில்லையே! அன்பரே என் றழைக்கலாமா?

மாணி: பகைவன் உன்பக்கத்தில் வருவானே? நாதா என்றழையேன்!

சந்: நாடகங்களில் கேட்டிருக்கிறேன், வாழ்க் கையில் அப்படி அழைப்பதில்லையே! 'என் னுங்க!' அதுவும் அவ்வளவு அழகாக இல்லை! அத்தான் என்று.

மாணி: அத்தனையும் சத்தாக இனிக்கிறது. சொல்- கூப்பிடு. என் கோமளமே எத்தனை முறை வேண்டுமானாலும் கூப்பிடு.

சந்: அத்தான்!

மா: சந்திரா! நீயும் நானும் இணைந்துவாழ உன் தந்தை சம்மதிப்பாரா? அவரோ மிராசு, நானோ கஞ்சிக்கின்றிவாடப்போகும் ஏழை. 'மாணிக்கத்துக்குச் சந்திரா' ஏற்படுமா இந் தக் கூட்டுறவு.

சந்: அத்தான்! எத்தனை ஆயிரத்தை என் முன்னே குவித்தாலும், எடுபிடி ஆளம்புக ளைக்காட்டி அச்சுறுத்தினாலும், நிலங்



களையும் நீர் நிறைகளையுங்காட்டி முயற்சித் தாலும் இந்தச் சந்திரா மணமாலையை என் அத்தானுக்கன்றி, செத்தாலும் எவருக்கும் சூடமாட்டேன் மாலையிடமாட்டேன்.

மா: புத்தமுதே! வளர்ந்துவரும் வையத்தை வளமாக்கியமாந்தர் வாழ்வென்னும் ஒரு பகுப்பை நமக்காகத்தான் ஏற்படுத்தினரோ என்று எண்ணுகிறேன். வானத்து முழு நிலவு வடிவுபெற்று ஓடிவந்து இந்த நீணி லத்து மணற்பரப்பில் நிலவிடுதோ என நினைத்துப்பூரிக்கிறேன். அழகென்னும் ஒரு சொல்லை அமைத்ததெல்லாம், உன்எழிலின் அமைப்பொன்றைக்கண்டோ அல்லது அதற்குமேல் கூறஇயலாத நிலையோ எனக் கருதிக் களிக்கின்றேன். முத்தும் பவழமும் ரத்தினமும் மரகதமும் உன்சிரிப்புக்கும் ஒளிவுக்கும் சிறப்பமைந்த தோற்றத்துக்கும் எதிர்நிற்க நாணுமே எனக்கண்டு அதனை உன்மீது புனையாது ஒன்றிரண்டை ஓர்புறத் தில் ஒப்பனைக்கு இட்டனரோ என்றெல்லாம் கலக்கமும் தெளிவுமாய் கண்டுகொண்டு தவிக்கிறேன். அன்பின்படைப்பே! அழ கென்னும் சொல்லழகே! உன் அத்தான் நான், இத்தனைநாள் எத்தாலும் உயர்ந்து ஏற்றமுற்றுவாழ்ந்தாலும் இந்தக்குலக் கொடியின் நட்பை - குறைவில்லா நிறைய முதை - மாணிக்கம் மகிழவரு மருவற்ற உயி ரோவியத்தைக் காணமுடியுமா? கண்டு என் துணையாகக் கொண்டு திகழமுடியுமா? இம் மட்டில் நான் செய்தசெயல்கள் எந்தப்பகு தியில் சேர்க்கப்பட்டாலும் கவலையில்லை. அவையெல்லாம் இந்த எழில்மேனிதனைக் கொள்ள ஏற்பட்ட காணிக்கை என்றே கருதுவேன்.

சந்: அத்தான்! நீங்கள் கற்றவர்கள். என் னென்னவெல்லாமோ கூறுகிறீர்கள். உவ மைக்கு வானத்தையும், ஒப்புக்கு ஆற்றங் கரையையும் இசைத்துப்பேச எனக்குத் தெரியாதத்தான்.

மா: அய்யய்யோ! வேண்டாமே. நீ கண்ணால் பேசுகின்ற பேச்சுக்குக் கணக்கில்லை என் றஞ்சி துணைக்கு நான் எங்கெங்கோ இயற் கையைத் துணை நாடுகின்றேன்.

சந்: நான் அவ்வளவு கொடுமையாகப் பார்க் கிறேனென்றால் இனி பார்க்கவில்லை.

மா: இல்லை சந்திரா! நீ இமையாதுபார்க்கும் இன்பவெள்ளத்தில் நான் தத்தளிக்கிறேன். அதற்கு இலக்கணமும் இலக்கியமும் எங்கே என்று தேடுகிறேன். உனக்கு என்மீது கொடுமை எனக்கூற என் உள்ளம் ஒப்புமா? உன் கருணைப்பார்வையாலல்லவோ இன்று நான் உயிர்பெற்றிருக்கிறேன். அன்று இந் தக் கண்பார்வைக்கு நான் ஆளாகாதிருந் திருந்தால் எனக்கு வாழ்வேது. எனக்கு வாழ்வளித்த வள்ளலல்லவா நீ! உன் வாயுரை கேட்டிருந்தாலே உயிர் வளர்ச்சியு றுமே உத்தமியே. உன்னையா கொடுமைக் காரி என்று கூறுவேன்.

சந்: நான் கூறியது தவறுதான்.

மா: தவறல்ல! அதுவும் ஆசையின் அள வுக்கு ஒரு எடுத்துக் காட்டுதான். ஏந்தி ழையே! இப்படியே நாம்வாழ உன் தந்தை யின் சம்மதம் கிடைக்குமாசந்திரா! உன் அப்பாமறுத்தால் நாம் எப்படி வாழ்வது.

சந்: அப்பாவின் சம்மதத்தை நிச்சயம் பெறு வேன். அந்தப் பொறுப்பும் அவசியமும் எனக்கல்லவா. நீங்கள் கவலைப்படாதீர்கள். தாங்களென்னை மறுக்கமாட்டீர்களே!

மா: என்னவார்த்தை கூறுகிறாய்சந்திரா! 'என்வாழ்வைத்தொலைத்துவிட்டேன் முடிந் தது வாழ்வு இனி ஏது நல்வாழ்வு' என வீழ இருந்த என்னை, 'இதோ உன்வாழ்வு' என்று தேடித்தந்த உன்னை மறப்பதா? ஒரு போதும் அவ்வாறெண்ணாதே!

சந்: அத்தான்!

மா: சந்திரா!

என்ற இருவரும் அயர்வால் புரண்டபோது விழித்துக்கொண்டனர். பொழுதும் புலரும் வேளையாய்விட்டது. சந்திரா போகப்புறப்பட் டாள். வழிநெடுக இருவரும் தாந்தாம் கண்ட கனவைக் கூறிக்கொண்டனர். நினைவுதான் கனவென்பதை வலியுறுத்தி அவளை வழிய னுப்பினான். முனியாண்டி வீராயி இருவரும் அப்போதுதான் தெருக்கூத்தும் அவர்தம் திருக்கூத்தும் முடிந்து திரும்பினர். முனி யாண்டி 'எஜமானியம்மாள் தன்னைக் கண்டு கொண்டாளோ' என அஞ்சினான். 'தன்னை முனியாண்டி கண்டுகொண்டானோ' என அவள் அஞ்சினாள். எனவே இருசாராரும் ஒருசேர வீடடைந்தனர். அன்று மாலை மிராசு தார் வந்து சேர்ந்தார். சந்திரா அன்றைக்குத் தன் உள்ளக்கிடக்கையெல்லாம் அவரிடம் ஒப் படைத்தாள். பட்டம் பதவி படாடோபத் திற்கு ஆட்பட்ட அவர், 'சந்திரா! நீ என்மகள். நான் இவ்வூர் மிராசு. உன்னை ஊர்பேர் தெரியாதவனிடம் ஒப்படைக்க ஒரு போதும் உடன்படமாட்டேன். இப்போது

தான் புரிகிறது, அன்று நீ அவனுக்காகப் பரிந்து பேசியது ஏனென்று. அப்போதே சந்தேகித்தேன். இருந்தாலும் மகள் மீது தந்தை சந்தேகப்படுவது மிகவும் மட்டமான செயலென்று எண்ணி, நீ கூறியவை வெறும் பேச்சு என்று நம்பினேன். இனி அவனைப் பற்றிய எண்ணத்தை விட்டுவிடு. இல்லாவிட்டால் நீயே நினைத்துத் துன்பப்படவேண்டிவரும்'

என்று கடுமையாகக் கூறிவிட்டார். அத்துடனல்லாது பெருங் காவலையும் ஏற்படுத்திவிட்டார். எவ்வகையாலும் அவள் வெளிச் செல்ல முடியாது செய்துவிடடார். மாணிக்கம் வெகுநேரம் சந்திராவின் வருகைக்காக எதிர்பார்த்திருந்தான். விழி நொந்தான். வரும் வழி நோக்கியிருந்த அவன் ஒருவாராக அவள் வீட்டை நோக்கிப் புறப்பட்டுவிட்டான். அப்போது பத்திரிகையில்கண்ட புகைப்படத்தின் அடையாளப்படி மிராசுதார் மாணிக்கத்தைக் கண்டுகொண்டார். அவனை அழைத்து, வர வேற்று வீட்டினுள் வைத்துவிட்டு மகளையும் அழைத்துக்கொண்டு போலீஸ் ஸ்டேஷன் நோக்கிச் சென்றார். சந்திராசெல்லுகையிலிருந்த முகமாற்றத்தையும் சைகையையும் உணர்ந்த மாணிக்கம் செய்வதியாதென அறியாது திகைத்து இறுதியில் ஒரு முடிவுடன் வெளியேறிவிட்டான்.

மிக விரைவிலேயே போலீஸ் அதிகாரிகளுடன் திரும்பிவந்த மிராசுதார் வீட்டில் மாணிக்கம் இல்லாததையறிந்து தேடிச் சென்று தொடர்ந்து பிடித்துவிட்டனர். போலீஸ்லாரி அவனை ஏற்றிக்கொண்டு புறப்பட்டது முதல் சந்திராவின் சிந்தையில் ஒரு சிதைவு ஏற்பட்டது. கார் புறப்படுவதுபோன்ற ஏதாவதொரு சத்தங்கேட்டாலும் மயக்கம் வந்து விழுந்துவிடுவாள்.

இவ்வாறு அவள் தினந்தினம் நிம்மதியற்று வாழ்ந்தாள். சிறைச்சாலையில் அவன் அமைதியற்று உழன்றான். தன்மகளின் நிலைகண்ட மிராசுதார் பேயோ-முனியோ-நோயோ யாதோவென அஞ்சி அதற்குவேண்டிய நீக்க முறைகளுக்கு அரும்பாடு பட்டார். எந்தவிதப் பயனும் ஏற்படவில்லை. இறுதியில் ஒருமருத்துவர். நோயின் நுண்மையை ஆராய்ந்து இது மனநிலைக்கோளாறால் ஏற்பட்டது என்று கூறிச்சென்றார். அதுமுதல் மிராசுதார், சிறையிலே வாடும் மாணிக்கத்தைத் தன்மருமகனாக ஏற்க முடிவு செய்துகொண்டார். அதற்காகப் போலீசாரின் உதவியையே மீண்டும் நாடினார். அவனைப் பிடிப்பதற்கு முன்னின்ற அவர்கள் அவனை விடுவிக்கமுடியாதெனக்கூறிவிட்டனர். அரசியல் கைதியாகிய அவனுக்கு அங்கே நல்முறைகள் பலவுங் கிடைக்கும்படி பணத்தாலும் செல்வாக்காலும் ஆவன செய்துவந்தார்மிராசு. அவனோ ஏனைய கைதிகளைப் போலவே தன்னையும் நடத்தவேண்டுமென்ற முரண்பாடு செய்தான். பாகுபாடுகள் வேண்டாமெனக்கூச்சலிட்டான். இவ்வாறாகத் தனக்குக் குறித்தகாலத்தை அண்மினான். விடுதலை பெற்று வரும் நாள் நண்ணியது.

அன்று சந்திரா அறியாவண்ணம் தானே சென்று மாணிக்கத்தை அழைத்து வரச் சென்றார். அவன் அவருடன் வர மறுத்துவிட்டான். இது இவ்வாறாக, தன் தந்தை வெளியே சென்றதும் "தனக்கினி மாணிக்கம் கிடைக்கமாட்டான்" என்ற எண்ணத்துடன் வீட்டைவிட்டு வெளியேறினாள். அடிக்கடி சந்திக்கும் தோட்டத்தை அடைந்தாள். அங்குள்ள தடாகத்தில் இறங்கினாள். அதே சமயம் அவ்வழி செல்லும் ரயிலிலிருந்த மாணிக்கம் சந்திராவைக்கண்டு ரயிலிலிருந்து குதித்து ஓடோடிவந்தான். உடம்பெல்லாம் அடிபட்டது. தடுமாறிக்கொண்டு ஓடிவருவதற்குள் சந்திரா தண்ணீரில் மூழ்கிவிட்டாள். இயலாத நிலையிலும் அவளை மீட்கும் நம்பிக்கையுடன் தண்ணீரில் இறங்கினான். இருவரும் அமிழ்ந்தனர். இரண்டு நாட்கள் பொறுத்து இருவரின் உடலும் கரையில் மிதந்தது. அந்த நிகழ்ச்சி மிராசுதாரைப் பைத்தியமாக்கியது. எந்த வகையிலும் அமைதியற்றவரானார். பகலெல்லாம் வீட்டினுள்ளேயே பிதற்றிக்கொண்டிருப்பார். இரவானதும் வெளிவானையும் வீதியையும் பார்த்துச் சிரித்தும் சினந்தும் ஏதேதோ புரியாதவாறெல்லாம நடித்தும் கழித்துவருவார். மணி பன்னிரண்டு அடித்த உடனேயே பரபரப்பாக விளக்கை ஏற்றிக்கொண்டு, தனக்காகக் காத்திருப்பவர்களைத் தேடிச் செல்வதுபோல ஓடியும் நடந்தும் செல்வார். குறிப்பிட்ட அந்த இடத்தையன்றி மற்றெங்கும் அவர் நாட்டம் செல்லாது. அங்கே சென்றபின் மேற்செல்லவும் மாட்டார். அங்குதான் அந்தத் தடாகமும் சோலையுமுள்ளது இரவில் அவர்கள் அங்கே சிரித்து விளையாடுவதாக அவர் எண்ணம். எனவே பன்னிரண்டடித்ததும் "சந்திரா சந்திரா" என்று கூவிக்கொண்டு சென்று அங்கே சிறிது நேரம் நின்றுவிட்டுத் திரும்பிவிடுவார். அவர்களின் ஆசைச்செலவு ஆயுள் செலவாகி மிராசுதாரின் வாழ்நாட் செலவாயிற்று.





# அண்டசராசரம்

(54)

## மோகினி அவதாரம்

"டம்பாச்சாரி நாடகத்தில் நகைச்சுவை நடிகர் சாமண்ணா பத்து வேடங்களில் தோன்றுவார்." என்று நாடகங்களில் விளம்பரப்படுத்தப்படும். ஒரே நடிகர் சம்பந்தமில்லாத பலவகை வேடங்களை எடுத்துக்கொள்வார். அதைப்போல, விட்டுணு பாற்கடல் கடையப்படும்பொழுது மூன்று அவதாரங்களை எடுக்க வேண்டியிருந்தது. பாற்கடலில் மேருமலையை மத்தாக வைத்துக் கடையும் பொழுது, மேருமலை ஆழ்ந்துவிட, அதைத் தாங்கிக்கொள்ள விட்டுணு கூர்மாவதாரமாகச் சென்றார். பாற்கடல் கடையப்பட்டு அமிர்தம் கிளம்பும் நேரத்தில், தன்வந்திரி அவதாரம் எடுத்து வந்தார். அமிர்தம் வெளிவந்து, பங்கிட்டுக்கொள்ள அசுரர்களும் தேவர்களும் போட்டியிட்டனர். இருவரில் அசுரர்கள் வலுவுள்ளவர்கள், மேலும், அமிர்தம் கடைவதில் அதிகமான துன்பங்களைத் தாங்கியவர்கள், பாம்பின் தலைப்பக்கத்தில் அசுரர்களை நிறுத்திவிட்டு, தேவர்கள் வால்பக்கத்தில் அல்லவா நின்றுகொண்டார்கள்! பாம்பின் தலைப்பக்கத்தில் இருந்ததால், பாம்பு விஷங்கக்கியதும் அதை அசுரர்கள் தாங்கிக்கொள்ள வேண்டியிருந்தது. "வால் பிடித்துக்கொண்டிருந்த" தேவர்கள் தொந்தரவு எதுவுமில்லாமல், அமிர்தம் கிளம்பியதும், சாப்பிடுவதற்கு மட்டும் முதல் வரிசையில் வந்து நின்றுகொண்டார்கள். அசுரர்களை ஒதுக்கித்தள்ளியது மட்டுமல்லாமல் அவர்களுக்கு அமிர்தம் ஏதும் கொடுக்காமல் ஏமாற்றவும் திட்டமிட்டனர். அந்தச் சூதுத்திட்டத்திற்குத் துணையாக விட்டுணு மோகினி அவதாரமெடுத்து வந்தார்.

அழகிய பெண்ணாக 'அல்லிக்கொடி போன்றுள், எடுப்பான மூக்கு, கவர்ச்சியான முகம், மார்பின் பாரம் தாங்காமல் வளைந்து விழும் இடை' என்றெல்லாம் ஸ்ரீமத் பாகவத புராணம் விவரிக்கிறது ஐந்து சுலோகங்களில்! மோகினி அழகாக இருந்தாள் என்ற அளவில் மட்டும் நாம் எடுத்தாள்—மோகினி அவதாரத்தில், அசுரர்கள் பக்கம் விட்டுணு வந்தார். அமிர்தத்திற்காகச் சண்டை போட்டுக்கொண்டிருந்த அசுரர்கள் மோகினியைச் சுற்றி, அமிர்தத்தை அவளிடம் கொடுத்து "எங்களுக்குள் சண்டை உண்டாக்காமல், இதைப்பங்குபோட்டு எங்களுக்குத் தா!" என்று கேட்டார்கள்.

மோகினி புன்னகையைப் பொழிந்து "நான் பிரித்துத் தருவதில், தவறு நேர்ந்தாலும் நீங்கள் எதிர்த்து எதுவும் சொல்லக்கூடாது. நான் செய்வதை அப்படியே ஒப்புக்கொள்வதென்றால், நான் அமிர்தத்தைப் பங்கு போடுவேன்" என்றாள். அவள் அழகில் மயங்கிய அசுரர்கள் அதற்குச் சம்மதித்தார்கள்.

மோகினி அமிர்தத்தை எடுத்துக்கொண்டு "அசுரர்களே! நீங்கள் போய் நீராடி, யாகங்களைச் செய்து, பிராமணர்களுக்குத் தானங்கொடுத்து, பிறகு வாருங்கள்!" என்று சொன்னாள். பிராமணர்களுக்குத் தானங்கொடுக்கவேண்டும்! போட்டது மோகினி—கண்டாரை மயக்கும் காமவல்லி வேடமென்றாலும், அந்த உருவத்தில்கூட பிராமணேத்த



மாக்களைக் காக்கவேண்டிய பொறுப்பை விட்டுணு மறந்துவிடவில்லை, புராணகாரர் மறந்துவிடவில்லை.

மோகினியின் கட்டளைப்படி அசுரர்கள் நீராடி, புதிய ஆடைகள் அணிந்து, பசுக்களுக்குப் பூசைசெய்து, பிராமணர்களுக்குத் தானங்கள் தந்து, அமிர்தத்தை வாங்கவந்து உட்கார்ந்தார்கள். தேவர்களும் அதே இடத்தில் முன்னதாக அமர்ந்திருந்தார்கள்.

மோகினி கையில் அமிர்த கலசத்தை ஏந்திக்கொண்டு வந்தாள். மார்பில் இரு கலசங்கள் இருந்தன. அதை மெல்லிய பட்டுத் துணி மூடி இருந்ததாம். நடனமாடி அவள் அசுரர்களிடம் வரும்பொழுது, மேலாடையைக் காற்று அடித்துவிட்டதாம் பாகவத புராணம் கூறுவது இது!

தேவர்களும் அசுரர்களும் ஒன்றாக உட்கார்ந்திருப்பதைக் கவனித்த மோகினி, அவர்களை இரண்டு பகுதிகளாகப் பிரித்து எதிர் வரிசைகளில் உட்காரச் செய்தாள். பின் தூரத்தில் இருந்தபடி, தேவர்களுக்கு மட்டும் அமிர்தத்தை மோகினி வார்த்து வந்தாள்.

அவள் எது செய்தாலும், பங்குபோடும் பொழுது தவறு நேர்ந்தால்கூட எதிர்த்து ஒன்றும் கேட்பதில்லை என்று அசுரர்கள் வாக்குறுதி தந்திருந்தார்களல்லவா அந்த வாக்குறுதியைக் காப்பாற்ற அசுரர்கள் பேசாமலிருந்துவிட்டார்கள்.

தேவர்களுக்கு அமிர்தம் வழங்கும்பொழுது இரண்டு அசுரர்கள் மறைந்துபோய், தேவர்களுக்கு மத்தியில் ஒளிந்து நின்று அமிர்தத்தை வாங்கிக் கொண்டார்கள். சூரியனும் சந்திரனும் அவர்களை மோகினிக்குக் காட்டிக் கொடுத்தார்கள், மோகினி தன் கையிலிருந்த அகப்பையால் ஓங்கி அடித்தாள், தலை வெட்டுண்டு விழுந்தது. அவள் அடிப்பதற்குள், அமிர்தத்தை அவர்கள் வாயில் போட்டு விட்டார்களாம். அதனால் தலைகள் மட்டும் உயிர்வாழும் தன்மையைப் பெற்றன. உடல்கள் அழிந்துவிட்டன. தலைமட்டும் உள்ள ராகு, கேதுக்கள், தங்களைக் காட்டிக் கொடுத்த சூரியசந்திரர்களைப் பிடித்து விழுங்குகின்றனவாம்.

தேவர்களுக் கெல்லாம் அமிர்தத்தைக் கொடுத்து முடிந்ததும், மோகினி தன் உருவத்தை மாற்றி, சுய உருவத்தைக் காட்டினளாம். விட்டுணுமூர்த்தி வந்து தங்களை ஏமாற்றிப்போனதை அறிந்தார்கள். மோகினியின் சாமர்த்தியத்தால், தேவர்களுக்கு சாகாத் தன்மை கிடைத்தது. அசுரர்கள் ஏமாற்றப் பட்டனர்.

அமிர்தத்தை உண்ட பிறகு தேவர்களுக்கு சிரஞ்சீவித் தன்மை ஏற்பட்டதேயன்றி, அசுரர்களை எதிர்த்துப் போராடும் ஆற்றல் ஏற்படவில்லை. அமிர்தத்தைப் பங்கிட்டு விட்டுணு மறைந்தவுடன், தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் சண்டை மூண்டதாம். அமிர்தம் உண்டிருக்கிறோம், அழியாத தன்மை பெற்றிருக்கிறோம் என்ற மமதையில் தேவர்கள் சண்டையிடப் போனார்கள். பாம்பின் தலைப்பக்கம் நின்று படாதபாடுபட்டும், அமிர்தம் வந்ததும் எல்லாவற்றையும் தேவர்களே எடுத்துக் கொண்டார்களே என்ற கோபத்தில், அசுரர்கள் வேகத்துடன் சண்டைக்கு வந்தார்கள். கடுமையான போராட்டத்தில், தேவர்கள் சாகாத வரம் பெற்றிருந்த போதிலும் அசுரர்கள்முன் ஆற்ற முடியாமற் போனார்கள். தேவர்கள் தோற்றோடிப் போகும் நிலையில், விட்டுணு களத்தில் வந்து அவர்களுக்கு உதவிசெய்து, அசுரர்களைச் சமாளித்தாராம். சாகாத் தன்மை பெற்றும், தேவர்கள் கோழைகளா யிருந்தனர். செத்து விடுவோமென்று தெரிந்தும் அசுரர்கள் வீரத்துடன் இருந்தார்கள்.

அமிர்தத்தைப் பங்கிட்டதுடன் மோகினியின் கதை முடியவில்லை. அசுரர்களை மோகினி எப்படி ஏமாற்றினள் என்று அசுரர்களின் ஏமாளித்தனத்தைமட்டும் மனதில் வைத்து புராணிகர் எழுதினரே யொழிய, 'அசுரர்களை நேர்மையான வழியில் வெல்லத் தேவர்களால் முடியவில்லை. அழகான பெண்ணை அனுப்பி, வெற்றி பெற முடிந்தது' என்பது வெளிப்படுவதைப்பற்றி புராணிகர் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அமிர்தத்தைப் பங்கு போட மோகினி அவதாரம் எடுத்துவந்த கதை பாகவத புராணத்தில் எட்டாவது காண்டம் எட்டு, ஒன்பது அத்தியாயங்களில் சொல்லப்படுகிறது. பன்னிரண்டாவது அத்தியாயத்தில் மோகினி மறுபடியும் வருகிருள். அசுரர்களை மயக்க அல்ல, ஆலகாலமுண்ட சிவபெருமானை மயக்க!

அமிர்தத்தைப் பிரித்துக் கொடுக்கத் திருமால் மோகினி அவதாரமெடுத்தார் என்பதைச் சிவபெருமான் கேள்விப்பட்டார். மோகினியின் சாமர்த்தியம் அல்ல, மோகினியைப்பற்றிப் பார்த்தவர்கள் அவரிடம் தந்த வர்ணனைகள் சிவபெருமானின் மனதை "ஒரு விதமாகக்" கலக்கியது. தனது பரிவாரங்களை அழைத்துக்கொண்டு, பார்வதி சமேதராய், இடப வாகனத்தில் ஏறி, விட்டுணு இருக்கும் வைகுண்டத்திற்குப் பரமசிவன் சென்ருர். வைகுண்டவாசிகள் பரமசிவனை வரவேற்று, விட்டுணுவின் முன் தகுந்த இடத்தில் உட்கார வைத்தார்கள்.

"தேவர் தேவனே! கடவுள்களுக்கெல்லாம் கடவுளே! அண்டங்களின் தலைவனே! ஆதி முதல்வனே! என்று பரமசிவன் விட்டுணுவைத் துதி செய்தார். (இது பாகவத புராணத்தின் கூற்று, பாகவதம் விட்டுணுவைப் பெருமைப்படுத்தும் புராணமாதலால், பரமசிவனை விட விட்டுணு உயர்ந்தவராகக் கூறும். விட்டுணுவை பரமசிவன் பணிந்து, புகழ்ந்தார் என்று இருக்கும். சிவ புராணங்களில் சிவனை விட்டுணு பணிந்து வணங்கியதாக இருக்கும்.)

விட்டுணுவைத் துதி செய்து முடித்ததும், "தேவரீர் இதற்கு முன் எடுத்த அவதாரங்களைக் காணும் பேறு எனக்கிருந்தது. ஆனால் தாங்கள் கடைசியாக எடுத்த மோகினி அவதாரத்தை நான் காணவில்லை. அந்த அவதாரத்தைக் காணும் பேராவலுடன், நானும் மற்றவர்களும் வந்திருக்கிறோம். கருணை கூர்ந்து மோகினி தரிசனம் தர வேண்டுகிறேம்!" என்று சிவபெருமான் வேண்டிக் கொண்டார்.

சிவபெருமானின் வேண்டுகோள் விட்டுணுவுக்குப் புன்னகையைத் தந்தது. மோகினி அவதாரத்தைக் கண்டு மயங்காதார் யாரும் இருக்க முடியாது. அதைக் காண வேண்டுமென இந்த மகாதேவன் மன்றாடுகிறனே! கண்ணழகில் தெய்வமென்றாலும், காமவேதனை தாங்காமல் பின்னால் துடிப்பான்! என்று விட்டுணு புன்னகை செய்தார். இருந்தாலும், சிவனின் வேண்டுகோளை நிராகரிக்காமல், அப்படியே ஆகட்டும்!" என விட்டுணு அருள் கூர்ந்தார்.

விட்டுணு மறைந்துவிட்டார். சிவனும், உமாதேவியும், மற்ற பூத கணங்களும் சுற்றிலும் பார்த்தனர், எங்கே மோகினி வருகிருளென்று:

கடைசியாகப் பக்கத்திலிருந்த பூங்காவில், மலர்க்கொடிகளுக் கிடையில், மலர்க்கொடி ஒருத்தி இனிய கானமெழுப்பி, பந்தாடுவதைக் கண்டனர். அதை முதலில் கண்டு பிடித்தவர் சிவன்தான். அவருக்குக் கண்கள் மூன்று இற்றே! அதிலும் மற்றவர்களைவிட அதிக மோகத்துடனிருந்தார். மோகினியை மோப்பம் பிடித்து, அவர் கண்டார். உமாதேவியும், பூத கணங்களும் அவருடன் பூங்காவனத்துக்குள் சென்று பார்த்தனர், பாவை பந்தாடும் கோலத்தை!

மோகினியின் அழகைப்பற்றிக் கேள்விப்பட்டதைவிட, நேரில் பார்த்ததும்தான் சிவனுக்கு அந்த அழகின் கடுமை அழகின் கொடுமை தெரிந்தது. கண்ணிமைக்காமல்- அது இயல்பு என்றாலும், கருத்தை இழந்து மோகினியைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

மோகினி அடியெடுத்து வைக்கும்பொழுதெல்லாம், அவள் இடை ஒடிந்துவிடும்போலிருந்ததாம். (சிவனருக்கு மனம் திக்கென்று பிடித்துக் கொள்ளும்). அந்த அளவு மார்பு கனம் இருந்ததாம். மெல்லிய ஆடை, அந்த அழகிய உருவத்தைக் காட்டியும் காட்டாமலும் மூடிக்கொண்டிருந்தது. சிவனாரின் கண்கள் அழகைத் தேடிக்கொண்டிருந்தன.

மோகினி வலது கையால் பந்தை அடித்து, இடது கையால் அவிழும் கூந்தலை முடித்து, நெகிழும் ஆடையைச் சரிசெய்துகொண்டிருந்தாள். கையை வீசிப் பந்தை அடித்தபடி, கண்ணை வீசிச் சிவனை அடித்தபடி, இருந்தாள் அந்தப் பொல்லாதவள்! சிவனைத் தான் கேட்க வேண்டியதில்லை, ஆறு உலகங்களுக்கு அப்பால் அழகி ஒருத்தி இருக்கிறளென்றால் காமப்போருக்குத் தயாராகி விடுபவர்! அதிலும் அருகிலே அழகி நின்று, கண்ணை வீசி, புன்னகை தருகிறளென்றால்! கேட்க வேண்டுமா? அப்படியே புளகாங்கிதம் அடைந்துவிட்டார்! பக்கத்தில் உமாதேவி, பூதகணங்கள் இருப்பதைக் கூட அவர் கவனிக்கவில்லையாம்! மோகினியைப் பார்த்து மோகப் பார்வைகள் தந்தபடி இருந்தார்!

மோகினி அடித்த பந்து வேகமாக உருண்டு தூரத்துக்கு ஓடியது. அதைப் பிடித்துவர மோகினி ஓடினள்! மோகினியைப் பிடிக்க சிவன் பின்னால் ஓடினர்! பந்து வேகமாகச் சென்றுவிட்டது, மோகினி இடை நடுங்க, மேனி தளர ஓடினள், ஆடை காற்றில் சிக்கிப் பறந்துவிட்டது. பின்னால் ஓடிவந்த சிவன் நின்றுவிட்டார், திகைப்படைந்து. மோகினி நிர்வாணத்துடன் இருக்கும் கண்கொள்ளாக் காட்சியைக் கண்டு!

மோகினி சிரித்துக்கொண்டு, செடி கொடிகள் அடர்ந்த இடத்தில் மறைந்து நின்றாள். பார்வதி, கோபத்துடன் பார்ப்பதையும் கவனிக்காமல், பரமசிவன் பாய்ந்து சென்றார். அவள் மறைந்த இடத்திற்கு, "பெண்

யானையை ஆண் யானை துரத்திச் செல்வதைப்போல." சிவனர், மோகினியின் அவிழ்ந்த கூந்தலைப் பிடித்து, ஆரத் தழுவிக் கொண்டாராம்! அவள் புரண்டாளாம், நெகிழ்ந்தாளாம், கூந்தல் புரண்டதாம் நாம் அதிகம் கூறவில்லை; புராணம் மிகரசனையுடன் எழுதி யிருக்கிறது. சிவனர் அணைத்துக் கொண்டது, மோகினியை-மோகினி உருவிலிருந்த விட்டுணுவை!

சிவனின் பிடியிலிருந்து தப்பி மோகினி ஓடினுள். சிவன் துரத்திக்கொண்டு ஓடினர்!

ஓடுகிற வழியில் குழந்தைபிறந்து விழுந்தது!

இந்தக் குழந்தை அரிகர புத்திரன் என்றழைக்கப்பட்டது. அரிக்கும் அரனுக்கும் பிறந்த குழந்தையாதலின்! அரிகர புத்திரனுக்கு மாசாத்தான், ஐயனர் என்ற மறு பெயர்கள் உண்டு!

மோகினிக்கும் சிவனுக்கும் உண்டான பிள்ளைஎனப் புராணிகர்கள் சிலர் கூறுவர், மோகினி விட்டுணுவின் அவதாரம் என்பதை மட்டும் மனதில் வைத்து! விட்டுணு அவதாரம் எடுத்தபொழுது, மோகினியாக—பெண்ணுக மாற்றிக்கொண்டார். ஆதலால் சிவனுக்கும் ஒரு பெண்ணுக்கும் உண்டான குழந்தை ஐயனர் என்பர். அரிஅர புத்திரன் என்ற பெயர் அரிக்கும் அரனுக்கும் பிறந்த பிள்ளை என்பதைப் பிரசித்தப்படுத்துகிறதே யன்றி, மோகினிக்கும் அரனுக்கும் பிறந்ததைப்பற்றிக் குறிப்பிடவில்லை!

ஆணும் ஆணும் கலந்துறவாட, குழந்தை பிறப்பதா என்பீர்கள்?

கந்த புராணத்தில் அதற்கு ஒருவிதமான விடையளிக்க முயன்றிருக்கிருர், அந்தப் புராணகாரர். பாகவத புராணத்தில், விட்டுணுவின் மாயா அவதாரத்தில் சிவன் சிக்கித் தவித்ததாகக் காட்டப்படுகிறது. அதில் விட்டுணுவுக்கு உயர்வு, சிவனுக்குத் தாழ்வு! கந்தபுராணத்தில், அதே கதை சிவனைத் தாழ்த்தாமல் கூறப்பட்டிருக்கிறது!

அமிர்தத்தைத் தேவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தபின், மோகினி மறைந்து விடுகிருள். மோகினியைப் பற்றித் தேவர்கள் சிவனிடம் சொன்னர்கள். சிவன் திருமாலை நினைத்து, மோகினியுருவுடன் வாவெனக் கட்டளையிட்டாராம்.

சிவன் நினைத்ததில் தவறில்லையாம்! ஏனெனில், விட்டுணு சக்தியின் ஒரு அம்சமானும்! சக்தி தேவதை, நான்கு அம்சங்களாக இருக்கிருளாம்—பார்வதி, துர்க்கை, காடுகிழாள், விட்டுணு, ஆகிய நான்கு சக்திகள்! இந்த அனுமானப்படி, விட்டுணு பெண் வர்க்கம், சிவன் அவரை (அவளை) நினைத்தாராம்!

விட்டுணு மோகினி உருக்கொண்டு எதிர்கொண்டு நின்ருள். மோகினி வேடத்தைப் பார்த்ததும், சிவன் அவளை விளித்து "உனது வேடம் இனிதாயிருக்கிறது, உன்னைப்புணர்ந்திடுங் காதல் எமக்கு உண்டு!" என்று கூறினர்.

"உண்டெமக்கு உனைப் புணர் காதல்நீ கொண்ட வேட மினிதென்று கூறினர்.

உன்னைப் புணர்வதற்கான காதல் எமக்கு உண்டு என்று சிவனர் கூறினர்.

விட்டுணு சக்தியின் அம்சமென்பது அறியாஞல், விட்டுணு சிவனரின் அழைப்பைக் கண்டு திகைப்படைந்திருக்கக் கூடாது. ஆனல், மோகினி வேடத்திலிருந்த விட்டுணு, மெய்விதிர்த்து, 'நீரோ விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற்பட்ட முழுமுதற் கடவுள்! அப்படியிருக்க ஒரு வேடத்தைக் கண்டு ஆசை பற்றியதாகக் கூறுவது சரியல்ல!" என்று தடுத்தார்.

சிவனர் முழுமுதற் கடவுளாயிற்றே! திருமால் கூறும் காரணத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. மற்றவர்கள் சொல்லி அவருக்குத் தெரியவேண்டியதென்ன இருக்கிறது!

திருமால் மேலும் கேட்டுக்கொள்கிருர்.

அன்பில் ஆடவர் ஆடவ ரோடுசேர்ந்(து)
இன்ப மெய்தி யிருந்தனர் இல்லையான்
முன்பு கேட்ட மன்று முதல்வனீ
அன்பொ டென்னைப் புணர்வது மாட்சியோ.

"முதல்வனே! ஆசையால் ஆடவர் ஆடவரோடு கூடி இன்பமெய்தியிருத்தல் என்பது நடவாத செயல். இதற்குமுன் நான் கண்டதுமில்லை கேட்டதுமில்லை. காதல் கூறி என்னைச் சேர நீர் அழைப்பது சரியோ, உணர்ந்து கொள்வீர்."

திருமால், சிவனுக்கு இந்தப் பாடத்தைச் சொன்னர்.





# அணுசக்தியும் உடல்நலமும்



கடந்த பத்தாண்டுகளில், அணுக்கதிரியக்கமுள்ள பொருள்களை நோயறிவதற்கும் நோய் தீர்ப்பதற்கும் பயன்படுத்தி, நல்ல பயன் கண்டிருக்கிருர்கள், இதனல், ஒரு புதிய வைத்தியமே தோன்றியுள்ளது. ஆயிரக் கணக்கான விஞ்ஞானிகள் அயராது வருந்தி உழைத்ததனல்தான் இந்த அரிய காரியங்கள் நடந்துள்ளன; வருங்காலத்தில் அணுசக்தி மக்கள் உடல் நலத்துக்கு மாபெரும் துணையாய் விளங்கும் என்னும் நம்பிக்கை அவர்களுடைய அயராத உழைப்பினுள் ஏற்பட்டுள்ளது.

அணுசக்தி வைத்தியத் துறையில் ஏற்பட்டுள்ள முன்னேற்றமெல்லாம் கிட்டத்தட்ட 1947-க்குப் பிறகு ஏற்பட்டதேயாகும். அந்த வருஷந்தான் அமெரிக்கா அணுக்கதிரியக்கமுள்ள ஐஸடோப்புகளைப் பெருவாரியாகச் செய்து உலகமெல்லாம் விநியோகிக்கத் தொடங்கியது. அப்பொழுதுதான் விஞ்ஞானிகளுக்கு அந்த அரும்பொருள் முதன் முதலாகப் போதிய அளவில் கிடைத்தது. அவர்களும் உடற்கூற்றின் இயல்களை மிகமிக நுணுக்கமாக ஆராயவும் பிணிகளைத் தீர்க்கவோ தணிக்கவோ புதுப் புது வழிகளைக் காணவும் முடிந்தது.

அணுசக்தியை அடக்கி யாண்டு மனிதனுடைய நன்மையை எவ்வாறு பெருக்கலாம் என்று அறிவதற்குக் கடந்த எட்டுஆண்டுகளாகப் புதிய வழி துறைகளும் நுண்ணிய கருவிகளும் கண்டு பிடித்திருக்கிருர்கள். அணுக்கதிரியக்கமுள்ள ஐஸடோப் எதனையும் மருந்தாகக் கொள்ளுமுன், அதன் அணுக்கதிர் எவ்வளவுக்கு மேற்போகாமல் இருந்தால் உடம்புக்குக் கேடு விளையாது என்றும், அணுசக்தி வைத்தியத்தால் இரத்தமும் எலும்பும் உடம்பின் உறுப்புகளும் என்னவாகின்றன என்றும், அவை கடைசியில் அணுக்கதிரியக்கத்தை எப்படிக் கழித்து விடுகின்றன என்றும் நுணு நுணுக்கமாக ஆராய்ந்து தெரிந்தாக வேண்டும். இவையும் இன்னும் பலசிக்கலான விஷயங்களும தெரிந்தால்தான், ஒவ்வொரு ஐஸடோப்பும் மருந்துக்கு உதவுமா எனபதும் அதை எப்படி உட்கொள்ளவேண்டும் என்பதும் தெரியும்.

அணுசக்தி வைத்தியம் இன்று ஆரம்ப திசையில்தான் இருக்கிறது என்ருலும் இன்று கைவரப்பெற்றது சில ஆண்டுகளுக்கு முன் கூடக்கனவாகவே இருந்தது. ஏற்கனவே நனவாகியிருக்கும் அருஞ் செயல்களால் இப் புதிய விஞ்ஞானம் உலகுக் கெல்லாம் மிகவும் முக்கியமான ஒன்ருக விளங்குகிறது.

இன்ன கோளாறுதான் என்று கண்டு பிடிக்க முடியாதபடி இருந்த பல நோய்களின் தன்மையை இன்று அணுக் கதிரியக்கமுள்ள ஐஸடோப்புகளை உடம்பினுள் செலுத்தி அவற்றின் போக்கைக் கருவிகளால் காண்பதால் உடனே அறிகிருர்கள். பின்னர் அதே ஐஸடோப்புகளை மேலும் ஊட்டினல் அந் நோய்கள் தீர்ந்து விடுகின்றன. தீராத நோய்கள் என்று நினைத்தவை பல இப்புதிய முறைகளால் ஒன்று தீர்க்கப்படுகின்றன அல்லது தணிக்கப்படுகின்றன.

அமெரிக்கா அணுசக்திக் கமிஷனின் உயிர் நூலும் வைத்தியமும் ஆகிய பகுதிக்குத் தலைவராக இருக்கும் விஞ்ஞானி டாக்டர் ஜான் பியூகொ் வைத்தியத்துறையில் அணு சக்தியால் ஏற்பட்டிருக்கும் சாதனைகள் புரட்சிகரமானவை என்கிருர். இன்னும் தொடர்ந்து நடக்கும் ஆராய்ச்சியில் நமது வாழ்நாளிலேயே அணுசக்தி வைத்தியம் உலகிலிருந்து பல நோய்களை ஓட்டிவிடும் என்கிருர் அவர். தொற்று நோய் உடல் நலத்துக்கு ஒரு பெருங் கேடாக இராது; புற்று நோய் தீர்ந்துபோகும் அல்லது திருப்தியாய்த் தணியும்; வெப்ப நாட்டு நோய்களை விளைவிக்கும் ஒட்டுண்ணிகள் ஒழியும் என்று அவர் சொல்கிருர். உலகமெங்கும் எல்லா இடங்களிலும் கோடிக் கணக்கான மக்களுக்குக் கனவிலுங் கருதாத சுகாதார நன்மைகள் வருங்காலத்தில் பூட்டி வைத்திருக்கின்றன என்றும் அவற்றைத் திறந்து தருவது இன்றைய அணுசக்தி ஆராய்ச்சி என்றும் அவர் கூறுகிருர்.

# பூமியைச் சுற்றும் செயற்கை நிலவு

பூமியின் முதலாவது செயற்கை கிரகம் அடுத்த வருஷத்தில் அமெரிக்காவினல் பிளோரிடாவிலுள்ள பாட்ரிக் விமானப் படை த்தளத்திலிருந்து வானில் விடப்படும்.

1957–58 சர்வதேச பூமி பௌதிக ஆண்டுக்கு அமெரிக்கா செய்யும் பணியின் பாற்பட்டதே இந்தத் திட்டம்.

செயற்கை கிரகத்தை வானில் விடுவதற்குத் தெரிந்தெடுக்கப்பட்ட இடத்தைத் தெரிவித்து அமெரிக்கத் தற்காப்பு இலாகா கீழ்க் கண்ட விவரங்களையும் வெளியாக்கியது:

முதலாவது வானில் விடப்படும் இந்தச் செயற்கை கிரகத்தை வானில் அது சுற்ற வேண்டிய வட்டத்துக்குக் கொண்டு சேர்க்கும் ராக்கெட் மூன்று நிலைகளில் வேலை செய்யும்; அந்த ராக்கெட்டுக்குத்துடுப்பு ஒன்றும் இராது; ஏனெனில் அது செல்லும் திசை அதன் மோட்டார் ஏற்படுத்தும் உந்து விசையினல் நிர்ணயிக்கப்படும். ராக்கெட்டின் வேகம் இதற்குமுன் வானில் ஏற்பட்ட எந்த வேகத்தையுங் காட்டிலும் மும்மடங்காகவேண்டும். விண்ணைக் கிழித்துக்கொண்டு செல்வதால் ராக்கெட்டின் நுனி 1000 டிகிரி பாரன் ஹீட் அளவுக்குச் சூடாகும்.

ராக்கெட்டில் முதல் நிலையில் இயங்கும் மோட்டார் 140 விநாடி இயங்கும்; அதனல் ஏற்படும் உந்துவிசை 27,000 பவுண்டாகும். திரவமான ஆக்ஸிஜனும் 'எதில் ஆல்க ஹால்' பெட்ரோல் ஸிலிகோன் எண்ணெய் இவை கலந்த கலவையும் சேர்ந்தே மோட்டாரை இயக்கும்; மேற்சொன்ன கலவையை எரி அறைக்குள் செலுத்துவது ஹைட்ரஜன் பெராக்ஸைடினல் இயங்கும் டர்பைன் இயந்திரப் பம்புகளாகும்.

ராக்கெட்டில் அடுத்தபடி இரண்டாவது நிலையில் இன்னொரு மோட்டார் இயங்கும்; அதற்கு விசையூட்டுவது புகையும் நைட்ரிக் ஆஸிடும் டிமெதில்–ஹைட்ரஸின் கலவையுமாகும்.

ராக்கெட்டை மேலும் இயக்குவதற்குப் பயன்படும் மூன்ருவது நிலை மோட்டார் தான் கருவிகள் அமைந்த செயற்கை நிலாவை (கிரகத்தை) வான்வெளியில் அது சுற்றவேண்டிய வட்டத்துக்கு எடுத்துச் செல்லும்.

முதலில் பூமியில் இருந்து ஒரு மைல்வரை இந்த ராக்கெட் செங்குத்தாக மேலே கிளம்பும்; பின்னர் சற்றுச் சாய்ந்தவண்ணம் படிப்படியாக மேலேறும். பூமிக்குமேல் சுமார் 35–வது மைலில் முதல்நிலை ராக்கெட் தீர்ந்துபோகும்; அப்பொழுது அது மணிக்கு 3,500 மைல் வேகத்தில் சென்றுகொண்டிருக்கும். இரண்டாவது நிலை ராக்கெட் பூமிக்குமேல் சுமார் 130-வது மைலில் மணிக்கு சுமார் 11,000 மைல் வேகம் எய்தியதும் தீர்ந்துபோகும். சுமார் 300 மைல் உயரத்தில் மூன்ருவது நிலை மோட்டார் இயங்கத்தொடங்கி, செயற்கை கிரகத்தை அது சுற்ற வேண்டிய வேகத்துக்குக்கொண்டு போய்ச் சேர்க்கும்; செயற்கைகிரகம் பூமியைச் சுற்றி மணிக்கு சுமார் 18,000மைல் வேகத்தில் செல்லும்.

கருவிகள் அமைந்த முதலாவது செயற்கை நிலவாகிய இது ஓர் உலோக உருண்டையா யிருக்கும்; எடை 12–1/62 பவுண்டு; குறுக்களவு குறைந்தது 20 அங்குலமாக இருக்கும். தரையிலிருந்து வானில் செலுத்தும் வாகனத் தின் நுனியில் அது பொருத்தப்படும். அந்த உருண்டையின் உள்ளே பாரன்ஹீட் 0 டிகிரிக் கும் கீழே எந்த நிலையிலுமிருந்து 300 அல்லது 400 டிகிரி பாரன்ஹீட்வரை உஷ்ண நிலை எது வாகவும் இருக்கும்.

வானிலை தெளிவாக இருந்து, செயற்கை நிலவு எப்பொழுதுபார்வைக்கு அகப்படும் என்று ஒருவருக்குத் தெரியுமானல், பொழுது விடியுமுன்னும் பொழுது அடைந்த பின்னும் சில மணி நேரங்களுக்கு அந்தச் செயற்கை நில வைக் கண்ணடிக்கருவிகளால் காணலாம் செயற்கை நிலவினுள்ளேயே ஒரு சிறிய ரேடியோ டிரான்ஸ்மிட்டரை வைத்து அதன் மூலம் இடைவிடாமல் பூமியிலிருந்து அதன் நிலையை அறிவதற்கு இப்போது அமெரிக்க கடற்படை ஆராய்ச்சியாளர் கவனஞ் செலுத் வருகின்றனர். இதனல், செயற்கை நிலவின் நிலைகள் தெரியவரும்; கண்ணடிக் கருவிகளா காணுவோருக்கு அது துணையாகும்; ஆயினு இவ்வாறு அதன் நிலையைத்தையும் அ வதற்கு—இரவிலும் பகலிலும் எந்த வேளையு எந்த வானிலையிலும் செயற்கை நிலவின் நிலையை அறிவதற்கு—ஆராய்ச்சி நிலையங்க பலவற்றை வரிசையாக அமைக்க வேண்டி தாகும்.



# கார்நிறக்கோன்

நானும் தோழர் க. அன்பர்கள் அவர்களும் அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் மூன்ரும் ஆனர்சு வகுப்பில் படித்துக்கொண்டிருந்தபோது ஒருநாள் மாலைப் பொழுதில், தில்லையில் அவரது வீட்டில் உட்கார்ந்து உரையாடிக்கொண்டிருந்தோம். அப்பொழுதுதான் புத்தாண்டு வகுப்புக்கள் துவக்கப்பட்டிருந்தன.

அந்தநாட்களில் தோழர் அன்பழகன் அவர்களது தந்தையார் தோழர் மணவழகனர் (கலியாண சுந்தரனர்) அவர்கள் தாம், இயக்கத்தின் நாள் - கிழமை - திங்கள் இதழ்களை வரவழைத்துப் பொதுமக்களிடம் இயக்கம் வளர்வதற்கான முறையில் பரப்பி வந்தார்கள். இயக்க இதழ்கள், இயக்க நூல்கள் வேண்டுமானல் எல்லோரும் தோழர் அன்பழகன் அவர்கள் வீட்டைத்தான் நாடுவார்கள்.

நாங்கள் உரையாடிக்கொண்டிருந்தபோது, "அல்லையாண்டு அமைந்த மேனி அழகர்" (கருநிறஅழகர்) ஒருவர் திடீரென்று உள்ளே நுழைந்தார். அவர் குறுகுறுத்த பார்வையும், சுறுசுறுப்பான அசைவும், மிடுக்கான தோற்றமும் கொண்டவராய்க் காணப்பட்டார். அவருடைய நடை நொடி நடிப்புக்களிலிருந்து அவர் ஒரு மாணவர் என்பதைப் புரிந்துகொண்டோம்.

"இந்த வாரக் 'குடியரசு' இருக்கிறதா?" என்று அவர் ஆர்வமும் எழுச்சியும் கலந்த குரலில் கேட்டார்.

"இருக்கிறது! வேண்டுமா?" என்று கேட்டார் தோழர் அன்பழகன்.

"ஆமாம்! ஒன்று கொடுங்கள்!" என்ருர் அவர்.

'குடிஅரசு' வாங்குகிற அளவுக்கு ஒருமாணவர் வந்திருக்கிருரென்பது எனக்கும் தோழர் அன்பழகன் அவர்களுக்கும் மிக்க மகிழ்ச்சி ஏற்படுத்தியது. இயக்கமாணவர்கள் மிகவாகத் தோன்ருதிருந்த அந்தக்காலத்தில், இயக்கமாணவர் எவரேனும் ஒருவரைக் கண்டுவிட்டால், அவர் எங்களுக்கு மலைபோல் தென்படுவார். உடனே அவரைப் பற்றிய விவரம் அறியவேண்டும் என்ற ஆவல் எங்களுக்கு ஏற்பட்டது.

"நீங்கள் யார், எந்த ஊர், பெயரென்ன, இதற்கு முன் எங்கு பயின்றீர்கள், இயக்கப்பற்று நீண்ட நாட்களாக உங்களுக்கு உண்டோ?" என்று கேட்டேன்.

"நான் பல்கலைக்கழகத்தில் முதல்வகுப்பில் பயில வந்திருக்கிறேன், ஊர் சங்கொலிக் குப்பம். என் பெயர் தண்டபாணி, கடலூரில் படித்தேன், இந்தி எதிர்ப்புக் காலத்திலிருந்து இயக்க ஆர்வம் உண்டு என்ருர்" அவர்.

இப்படிப்பட்ட முறையில் அறிமுகம் ஆன தோழர் தண்டபாணி அவர்கள் தாம் பிற்பாடு தோழர் இரா. இளம்வழுதியாகக் காட்சிதந்தார்.

அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் இயக்கத்தை மாணவர்களிடையே பரவச்செய்ததில் தோழர் இளம்வழுதி அவர்களுக்கும் உரியமுக்கிய பங்கு உண்டு. திராவிட மாணவர் இயக்கத்தைக் கட்டுக்கோப்போடும், அமைப்போடும் வளர்ப்பதில் அவர் தனி ஆர்வங்காட்டிவந்தார். அவர் அண்ணமலை நகரில் எப்பொழுதும் ஐந்தாறுமாணவர்கள் பின்தொடர, வட்டமிட்டுக் கொண்டிருப்பார். அவர் அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் படித்துக் கொண்டிருந்த ஐந்தாறு மாணவிகளை மாணவர் இயக்கத்தில் உறுப்பினராக்கி, அவர்களை 1945-இல் திருச்சியில் நடைபெற்ற மாநில மாநாட்டிற்கும் அழைத்துக் கொண்டு வந்தார்.

அவர் பல்கலைக் கழகத்தின் பல்வேறு சங்கங்களில் ஈடுபாடு கொண்டிருந்ததோடு, உணவுவிடுதி நிருவாகத்திலும் பங்குகொண்டு திறம்படச்செயலாற்றிவந்தார்.

அவர் பல்லைக் கழகத்தில் படிக்கும் போதும் பலபேச்சுப்போட்டிகளில் கலந்து கொண்டு பரிசுகளாக நூல்கள், பதக்கங்கள், கோப்பைகள் ஆகியவற்றைப் பெற்றிருக்கிருர்.

தோழர் இளம் வழுதி அவர்கள் எதையும் திட்டம் போட்டு, முறைப்படி, ஒழுங்காகச் செய்து முடிக்கும் திறம்படைத்தவர்.

கழகக்கொடி பறக்க முடியாதிருந்த அண்ணமலைநகரில், அதனைப் பறக்கவிட்ட முயற்சியில் தோழர் இளம் வழுதி அவர்களுக்குப் பெரும்பங்கு உண்டு.

அவர் அறிஞர்அண்ண அவர்களால் 'பிளாக் பிரின்ஸ்' Black Prince 'கார்நிறக் கோன்' என்று அன்போடு அழைக்கப்படுவார்.

—இரா. நெ.

Regd. M 6296 MANRAM



"மன்றம்" அச்சகத்தில் (26, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை-1)

ஆசிரியர் : இரா. நெடுஞ்செழியன், எம். ஏ. அவர்களால் அச்சிடப்பட்டு வெளியிடப்படுகிறது.

